உ

# சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ்

# Swarnapuri Ambikai Pillai Tamil

★

MAHAMAHOPADHYAYA
DR. U. V. SWAMINATHAIYER LIBRARY
TIRUVANMIYUR, MADRAS - 600 041.
1982

# சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத் தமிழ்

பதிப்பாசிரியர்
**வித்துவான் வி. மு. சுப்பிரமணிய ஐயர், எம். ஏ. பி. ஓ. எல்.**

மகாமகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்
திருவான்மியூர் : : சென்னை–600 041
1 9 8 2

# SWARNAPURI AMBIKAI PILLAI TAMIL

Tbe "Swarnapuri Ambikai Pillai Tamil" is based on a single palm leaf manuscript no. 1140 preserved *in the Dr. U. V. Swaminatha* Iyer Library, Madras. At places the manuscript is damaged. There are 99 verses preserved in the text, which is published for the first time. The text has been critically edited with notes by Sri V. M. Subrahmanya Iyer, a disciple of Dr. U. V. Swaminatha Iyer. We record with deep regret, the sudden demise of Sri V. M. Subrahmanya Iyer, before the present book could be released.

The 'Pillait—Tamil' is a class of Tamil literary composition extolling a God or human being, conceived as a child and its sports *in its various stages of development.* Ten such stages are recognised in ancient treatises.

*2nd month after the birth is Kappu. (Protective sacred thread)*

| | |
|---|---|
| 5th month | Sengirai (Prince's feather) |
| 7th month | Tal (lullaby) |
| 9th month | Cappani (clapping hands) |
| 11th month | Muttam (Kiss) |
| 12th month | Varan (Walk) |
| 1½ years. | Indu (Moon) |
| 2nd year | Sirril (miniature sand house) |
| 3rd year | Parai (Little drum) |
| 4th year | Ter (Toy car) |
| | Kalangu (a seed) |
| | Ammanai (wooden ball) |
| | Usal (swing) |

Obviously the Tamils have recognised ten significent stages in the growth or thc child and its *ability* to grasp *certain moods. Tamils'*

love for ilterature has led them to associate literary compositions with the paychological growth of the child.

Some of these stages like the 'toy car' (in Pattinappalai) and 'Sand house' (Sirril in Kalittohai) are referred to in Sangam literature, But the greatest literary composition on God as a child, is by the *Vaishnava saint Periyalvar, in* the 9th cent-, ury Steadily the 'Pilliat-Tamil' works gained popularity through the centuries. The Meenakshi Amman Pillai Tamil by Kumara Gurupara Swamigal is considered the best,[1] by all authorities.

*According to ancient* works on poeties, the pillait-tamil work should have invocatory verses In praise of Gods like Genesa Subrahmanya, Siva, Vishnu, Brahma, Surya, Saptamatas, Lakshmi and Sarasvati. Further, Sattan, (Aiyanar), Vadugan (Bhairava) Kubera and the thrity three Gods are also invoked. It is interesting *to note invocation* to Sattan (Aiyanar) invariably included in all the works dealing with Pillai Tamil. Also the special place given to Bhairava in these works deserve special notlce.

The present text 'Swarnapuri Ambikai Pillai Tamil, refers to *Candakopa, the eight* Bhiravas, Satavahana (Sattan or Aiyan), the eight directional elephants and the Navakoti Siddhas in the invocatory verses in addition to the classlcal Gods. Another invocatory verse not found in other texts, is a speclal invocation to the sacred ash (Vibhuti—Thiruniru). It is said (verse 9) that the *sacred ash will* ward off evils like Vetala, Bhuta, Rattacamund, Municandi, Viran and also ailments like terrific head ache, fever, Billi, Sunya etc.

The actual work is on the Goddess, Swarnapuri Ambikai as a child. The *temple of the* Goddess is in the ancient village of Nangur, in Tanjore district. Nangur is known for its Velir Chieftains, who were great Warriors and who had matrimonial alliances with the Chola ruler. Nangur is also a great Vaishnavite Kshetra, sung by Thirumangai Alvar. Several Siva Temples once existed here. One of the temples is known as Ponnukku Olithar and the Goddess Ponalanta Nayaki. This Goddess is now called Swarnapurf Nayaki on whom the present Pillai Tamil is composed.

The name of the author of this work is not known; nor is it possible to determine the age of the text. Some of the verses are really classical and the author seems to have been an accomplished poet. (Ref. verses—13, 45, 72, 77, 91)

We are thankful to the Government of India—Ministry of Culture for its liberal grant towards the publication of the book.

Madras-41.
31-3-1982

Dr. R. NAGASWAMY.

# இப்புத்தகத்தில் அடங்கியவை

## இப்பதிப்பில் மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூற்பெயர்களின் முதற்குறிப்பகராதி

கம்ப — கம்பராமாயணம்

கலித் — கலித்தொகை

சிலப் — சிலப்பதிகாரம்

சீவக் — சீவகசிந்தாமணி

சூடா — சூடாமணிநிகண்டு

சேது — சேதுபுராணம்

திருவிளை — திருவிளையாடற் புராணம்

திவ் — திவ்யப்பிரபந்தம்

தே — தேவாரம்

நன் — நன்னூல்

பதிற்றுப் — பதிற்றுப்பத்து

புறநா — புறநானூறு

பெருங் — பெருங்கதை

மணி — மணிமேகலை

மதுரை — மதுரைக்கலம்பகம்

மீனாட்சி — மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

முத்துக் — முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

லலிதா — லலிதாஸஹஸ்ரநாமம்

# அணிந்துரை

சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ் என்னும் நூல் இப்பொழுது டாக்டர் ஐயரவர்கள் நூல் நிலையத்தாரால் முதன் முதலாக வெளியிடப்படுகின்றது. இந்த நூலின் சுவடி ஒன்றேதான் கிடைத்தது. அந்தச் சுவடியிலும் சில சொற்களும், சில பாடல்களும் சீர்களும் விடுபட்டுள்ளன. அப்பகுதிகள் ஏட்டில் உள்ளவாறே பதிப்பிக்கப் பெற்றன.

இந்நூல் புதிதாக எழுதப் பெற்ற குறிப்புரையுடன் வெளியிடப் பெறுகின்றது. இந்த நூலைத் தமிழ்ப் பற்றுடையவர்கள் தமிழ்த் தெய்வத்திற்கு அணியப் பெறும் அணிகளுள் ஒன்றாகக் கருதி வாங்கிப் படித்துத் தமிழ்ச் சுவையையறிந்து இன்புறுவார்கள் என்று நம்புகிறோம்.

இந்நூலில் சுந்தருடைய செயல்கள் விரிவாகப் பாராட்டப் பெற்றுள்ளன. நாங்கூர் மிகப் பழைய காலம் தொடங்கியே சிற்றரசர்களால் ஆளப்பெற்று வந்துள்ளது. அங்கே உள்ள சிவாலயங்களுள் எழுந்தருளியிருக்கும் சொர்ணாம்பிகையின் பேரில் பாடப் பெற்றது. நூலாசிரியர் பெயர் தெரிந்து கொள்ள இயலாதது வருந்தத் தக்க செய்தியாகும். இதன் ஆசிரியர் மிக்க சைவப் பற்றுடையவர் என்பது இந்நூலில் காணப்படும் பல செய்யுட்களால் அறியவரும் செய்தியாகும்.

**வித்துவான் வி. மு. சுப்பிரமணிய ஐயர்,**

எம்.ஏ., பி.ஓ.எல்.,

30-8-81

பிரஞ்ச் இன்ஸ்டிடியூட் ஆப் இண்டாலஜி

புதுச்சேரி.

# பதிப்பாசிரியர் குறிப்பு

"மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய் வாய்படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண் டேனும் விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வ முளதோ சகல கலாவல்லியே."

சங்க இலக்கியங்கள் இன்று தமிழுலகில் பீடுநடை போடு கின்றன என்றால், அதற்கு முதற் காரணகர்த்தா டாக்டர் ஐயரவர்கள் தான். அநங்கயாலங்காரத்திற்கு எடுத்துக் காட்டாகப் பதிப்பித்துறையில் ஏன்? எல்லாத் துறைகளிலுமே ஐயரவர்களுக்கு உவமை கூறவேண்டுமென்றால் ஐயரவர்களைத் தான் கூறவேண்டும்.

ஐயரவர்கள் அரும்பாடுபட்டுக் கறையானுக்கு உணவாகா மலும் ஆடிப்பெருக்குச் சமயத்தில் ஆற்றில் போகாமலும் பாது காத்துப் பல சங்க இலக்கியங்களையும், புராணங்களையும், பிரபந்தங்களையும், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணி மேகலை முதலிய நூல்களையும் அச்சுவாகனம் ஏற்றி என்றும் அழியாவண்ணம் இருக்கச் செய்தார்.

அவர் பெயரால் திருவான்மியூரில் இலங்கிவரும் நூல் நிலையம் திருமதி ருக்மிணி தேவி அவர்கள் பரிபாலனத்தில் செவ்வனே நடந்து வருகிறது.

இந்நூல் நிலையத்தின் வளர்ச்சிக்கும் இந்நூல் வெளிவரு வதற்கும் காரண கர்த்தாவாக இருந்த அமரர் திரு. டி.வி.விசுவநாதையர் அவர்கள் இந்நூல் வெளிவரும்போது இல்லையே என்று வருந்துகிறோம்.

இந்நூல் நிலைய முன்னேற்றத்திற்காக ஊக்கம் காட்டி வரும் தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநரும் இந்நூல் நிலைய ஆட்சிக்குழுத் தலைவருமான டாக்டர் திரு ஆர். நாகசாமி அவர்கள் அச்சாகாத நூல்கள் வெளிவருவதற்கு முயன்று வருவது மிகவும் பாராட்டுதற்குரியது.

இந்நூலைச் சிறந்த முறையில் பதிப்பிக்க என்னுடன் தன்னுடைய வயது முதுமையையும் பாராமல் விடாமுயற்சி

யுடன் திருத்திக் கொடுத்த ஐயரவர்கள் மாணுக்கரான †திரு. வி. மு. சுப்பிரமணிய ஐயரவர்களுக்கு நன்றி.

இந்நூல் சிறந்த முறையில் வெளிவர ஆர்வம் காட்டி ஊக்கமூட்டிய டாக்டர் ஐயரவர்கள் பேரரும், நூல்நிலையக் கௌரவப் பாதுகாவலருமாகிய திரு க. சுப்பிரமணிய ஐயருக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலை வெளியிட நாங்கூரைப் பற்றிச் சில விஷயங்களைத் தெரிவித்த தஞ்சை மாவட்டம் மேலப்பாதியிலுள்ள இந்து உதவித் துவக்கப்பள்ளி ஆசிரியர் திரு இராம. சீனிவாசன் அவர்களுக்கும், மேலப்பாதி திரு. வி. க. நூல்நிலையச் செயலர் திரு சு. பாலகிருஷ்ணன் அவர்களுக்கும் எங்களது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

இந்நூலை நல்ல முறையில் விரைவில் அச்சிட்டுக் கொடுத்த ஜீவன் அச்சுக்கூடத்தின் உரிமையாளர் திரு. கே. எம். ஜான் அவர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

மத்திய அரசு இப்பதிப்பு வெளிவருவதற்குப் பெருமளவு மானியம் அளித்தமைக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

**வித்துவான் சு. பாலசாரநாதன்**

*ஆராய்ச்சித் துறைப்பிரிவு*
*டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்.*

திருவான்மியூர்
14-12-81.

---

† இந்நூல் வெளிவரும்பொழுது திரு. வி. மு. சுப்பிரமணிய ஐயரவர்கள் இல்லையே என்பதை நினைக்கும்போது சொல்லொணுத் துயரம் ஏற்படுகிறது

# சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ்

## நூன்முகம்

சொல்லும் பொருளும் எனஎங்கும் தோய்பரஞ் சோதிதனைக்
கல்லும் கரையக் கரைவார்க் கமுதைக் கடிவினைநோய்
வெல்லும் பரமனைச் சுந்தர மூர்த்தி விநாயகனை
அல்லும் பகலும் நினைவார்க்குத் துன்பம் அகன்றிடுமே.

(ஐயரவர்கள் பாடல்)

உலகில் வழங்கும் பலமொழிகளுள் உயர்தனிச் சிறப்பு வாய்ந்து விளங்குவது தமிழ்மொழி ஒன்றேயாகும். புகழ்ச்சி அன்று உண்மை. இம்மொழி தன்னேரில்லா இலக்கிய இலக்கண வளனைப் பெற்றிருப்பதே சிறப்புடன் விளங்கக் காரணமாகும். இலக்கியம், சிற்றிலக்கியம், பேரிலக்கியம் என்று இருவகைபபடும். சிற்றிலக்கியங்கள் என்று சொல்லப் படுவன உலா, அந்தாதி, கலம்பகம், பரணி, பிள்ளைத்தமிழ், தூது முதலியன.

பிள்ளைத் தமிழுக்கு இலக்கணம் விளக்கமாகக் கூறுகின்ற நூல் பாட்டியல் நூலாகும். தொல்காப்பியத்தில் பிள்ளைத் தமிழுக்கு இலக்கணம் கூறப்படவில்லையாயினும் குறிப்பினுல் அறியக்கூடிய வகையில் கூறப்பட்டிருக்கிறது. 'குழவி மருங்கினும் கிழவதாகும்': இதன் பொருள், குழவிப் பருவத்தும் காமப்பகுதி உரியதாகும். (புறத்திணையியல் சூ. 29). இச்சூத்திரத்திற்கு உரை எழுதும் உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர், "குழவியைப் பற்றிக் கடவுள் காக்க" என்றும், பாராட்டுமிடத்துச் "செங்கீரை, தாலும், சப்பாணியும், முத்தமும், வரவு உரைத்தலும், அம்புலியும், சிற்றிலும், சிறுதேரும், சிறுபறையும் எனப் பெயரிட்டு வழங்குதலாலும்" என்றும் கூறியுள்ளார்.

இதனுல் தொல்காப்பியர் காலத்தும், அவர் காலத்துக்கு முன்பும் பிள்ளைத் தமிழ் பாடுவதற்குரிய கருப்பொருள் இருந்தது என்பது தெரிகின்றது.

இது 'பொன்கால் புதல்வர் புரவியின் றுருட்டும் முக்கால் சிறுதேர்' என்று பட்டினப் பாலையிலும் 'மணல் சிற்றில் காலில் சிதையர்' என்று கலித்தொகையிலும் 'தலம் துளங்க சப்பாணி கொட்டும்' 'செங்கீரை ஆடிற்றே' எனப் பதினொன்றும் திருமுறையிலும் கூறப்பட்டுள்ளது. மேலும் 'வையம் அளந்தானே தாலேலோ' 'மாமதிநீ மகிழ்ந் தோடிவா' 'என்குட்டனே முத்தம் தா' 'மல்லிகைப்பூச் சூட்ட வாராய்' என்று பெரியாழ்வாரும் 'தாராளும் நீள்முடி என் தாசரதி தாலேலோ' என்று குலசேகர ஆழ்வாரும், 'நாயகனைத் தாலாட்டு நவம்பல பாராட்டினுர்' 'திருமுக மண்டலம் அசையச் செங்கீரை ஆடினுர்' 'தாமரைச் செங்கைகளினுல் சப்பாணி கொட்டினுர்' 'வாழவரும் அவர்தம்மை வருக வருகவென அழைப்ப' 'சிறுமணித்தேர் தொடர்ந்துருட்டிச் செழுமணல் சிற்றில் இழை நறுநுதல் பேதையர் மருங்கு நடந்தோடி அடர்ந்தழித்தும்' எனச் சேக்கிழாரும், பிள்ளைத்தமிழ் பற்றி முறையே கூறியிருக்கும் குறிப்புக்களாலும் அறியலாம்.

**பன்னிருபாட்டியல்** என்னும் நூல் :—

**" பிள்ளைப் பாட்டே தெள்ளிதின் கிளப்பின்**
**மூன்று முதலான மூவேழ் அளவும்**
**ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே"**
**'ஒன்றுமுதல் ஐயாண்டு ஓதிலும் வரையார்'**
**'தோற்றம் முதல்யாண்டு ஈரெட்டு அளவும்'**
**ஆற்றல் சான்ற ஆண்பாற்கு உரிய'**
**'காப்புமுதல் ஆகிய யாப்புவகை எல்லாம்**
**பூப்புநிகழ் வளவும் பெண்பாற்கு உரிய'**
**'தொன்னில வேந்தர் சுடர்முடி சூடிய**
**பின்னர்ப் பெருஅர் பிள்ளைப் பாட்டே**
**'காப்பொடு செங்கீரை தால்சப் பாணி**
**யாப்புறு முத்தம் வருகஎன் றல்முதல்**
**அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்**
**நம்பிய மற்றவை சுற்றத் தளவென**
**விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்'**
**'திருந்திய பெண்மகவு ஆயின் விரும்பிய**
**பின்னர் மூன்றும் மன்னுநீக்கு என்றனர்'**
**'சிற்றில் சிறுதேர் சிறுபறை ஒழித்து**

மற்றவை மகளிர்க்கு வைப்பதாகும்'
'சிற்றில் இழைத்தல் சிறுசோறு ஆக்கல்
பொற்பமர் குழமகன் புனைமணி ஊசல்
யாண்டுஈ ராறு அதில் எழிற்காமன் நோன்பொடு
வேண்டுதல் தான்உள விளம்பினர் புலவர்'

'திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேல் முருகன் பரிதி வடுகன்
எழுவகை மங்கையர் இந்திரன் சாத்தன்
நிதியவன் நீலி பதினொரு மூவர்
திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே' என்று பிள்ளைத் தமிழுக்கு இலக்கணம் விரித்துரைக்கின்றது.

கி.பி. 12வது நூற்றாண்டில் குணவீர பண்டிதர் இயற்றிய வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப்பாட்டியலில் பிள்ளைத்தமிழ் பாடும் முறையை

" கண்டுரைக்கிற் பிள்ளைக் கவிதெய்வங் காக்கவெனக்
கொண்டுரைக்கும் தேவர் கொலையகற்றி—ஒண்டொடியால்
சுற்றத் தளவா வகுப்பொடு தொல்விருத்தம்
முற்றுவித்தல் நூலின் முறை'' என்றும்

" முறைதரு மூன்றாதி மூவேழீ றாந்திங்கள்
அறைகநிலம் பத்துமாண் டைந்தேழ்—இறைவனையார்க்
கந்தம் சிறுபறையே யாதியா மூன்றொழித்துத்
தந்தநில மோரேழுஞ் சாற்று''

" சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை — போற்றரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து'' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

நவநீதப் பாட்டியல் என்னும் நூல்.

" விரிசடைப் பிஞ்ஞகன் வேய்த்தோள் எழுவர்முன் காக்கவென்ன
அருள்பெறக் கூறி வைரவர் செய்யும் கொலையகற்றி
உரியநற் கங்கை யுமையாள் மதியூர் விடைகடுக்கை
விரைமலர்த் தார்மற்று மங்கல மாக விளம்புவரே''.

" பதினொரு மூவரும் பங்கயத் தோனும் பகவதியும்
நிதிமுத லோனும் பரிதியும் சாத்தனும் நீள்அமரர்க்கு
அதிபதி தானும் அறுமுகன் ஐங்கரத் தற்புதனும்
மதிபுனை வேணி வடுகனும் காவல்செய் வானவரே "

"முன்தந்த காப்புச்செங் கீரை தால் சப்பாணி முத்தத்தொடு
மற்றந்த வாரானை யம்புலி வாய்ந்த சிறுபறையே
சிற்றில் சிதைத்தல் சிறுதேரு ருட்டுதல் சேர்ந்தபத்தும்
சுற்றத் தளவும் கவிக்கெல்லை யாக்கொண்டு சொல்லுவரே '

"மூன்று முதலிரு பத்தொரு திங்கள் முடிவளவாய்த்
தோன்று நிலைபத்துஞ் சொல்லுவர் தோகையர் தங்களுக்கும்
ஆன்ற புகழ்ச்சிக்கு மவ்வகை யாமென்பர் ஐந்தேழென
ஏன்றநல் லியாண்டி னகவரை தானும் இயம்புவரே"

"சொன்ன சிறுபறை யேமுதன் மூன்றும் சுருங்கிவரும்
வன்ன விருத்தம் வகுத்தவீ ரெண்கலை வண்ணச்செய்யுள்
அன்னவை யோரைம் பதிலஃகா தெல்லை அறைவர்கற்றோர்
பொன்னு மணியுநற் போகமு மீன்ற புணர்முலையே"

"சிறுபறை யேமுதன் மூன்றுந் தெரியிலப் பேதையர்க்குப்
பெறுவனவல்ல; இளையனே யாயினும் வேந்தன்பெறுன்
மறுவில் முடிசூடிற் பிள்ளைக்கவி காப்பு மாலைமுன்னே
அறிபவ ரொன்பதும் பன்னொன்று மாக அறைவர்களே"

*என்று பிள்ளைக்கவிக்கு இலக்கணம் விரித்துரைக்கின்றது.*

*16ஆம் நூற்றாண்டில் தோன்றிய* சிதம்பரப்பாட்டியல் *என்னும் நூல்*

"துறுகொலைநீக் கித்தெய்வக் காப்பாய்ச் சுற்றம்
தொகையளவு வகுப்பகவல் விருத்தம் தன்னால்
முறைகாப்புச் செங்கீரை தால்சப் பாணி
முத்தம்வா ரானையம் புலியிரனோடு
சிறுபறைசிற் றில்சிறுதேர் இவைபின் மூன்றும்
தெரிவையர்க்குப் பெருகழங்கம் மானை ஊசல்
பெறுமூன்று முதலிருபத் தொன்றுள் ஒற்றை
பெறுதிங்கள் தனில்பிள்ளைக் கவியைக் கொள்ளே " *என்று*

*பிள்ளைக்கவிக்கு இலக்கணம் பகர்கின்றது.*

பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தின் தோன்றிய பிரபந்த மரபியல் என்னும் நூலில்

''செறிகொலை நீக்கித் தெய்வம் காப்பெனத்
தொகைஅளவு வரையும் இசைவகுப்பு அகவ
விருத்தம் தன்னால் வினவுமுறை காப்புச்
சாற்றுசெங் கீரை தால்சப் பாணி
வழங்கும் முத்தம் வாரானை அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் பத்தும்,
ஈற்றில மூன்றுஒழித்து ஏந்திழை யார்தமக்கு
உறுகழங்கு அம்மானை ஊசல் அமைய,
மூன்றுமுதல் இருபத் தொன்றனுள் ஒற்றைப்
பெறுமதி கொளலாம் பிள்ளைக் கவியே ''
''இமையவர் வேதியர் இயல்மனர் வைசியர்
சூத்திரர் என்னச் சொற்றஐ வருக்கும்
முறையே நூறு முதல்அறு பான்வரை
கணிக்கும் பிள்ளைகளைக் கவியின் தொகையே ''

என்று பிள்ளைக்கவிக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

17வது நூற்றாண்டில் வைத்திய நாததேசிகர் இயற்றிய இலக்கண விளக்கம் என்னும் நூல்

''கொடிய கொலைத்தொழிலை அகற்றி அருள்நீர்மை தோன்றக் கடவுளைப் புகழ்ந்து கூறி, அக்கடவுள் காக்க எனக்கூறும் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் ஈறாக முறையான் வகுத்த பத்தும் பெறும் ஆண்பாற் பிள்ளைக்கவி.

அப்பருவம் பத்தனுள்ளும் பிற்கூறப்படும் சிறுபறை முழக்கலும், சிற்றில் சிதைத்தலும், சிறுதேர் உருட்டலும் பெண்பாற்கு ஆகா; கழங்கு, அம்மானை, ஊசல் பாடும் கவிகளால் பாடப்பட்டு வகுப்பானும், அகவல் விருத்தத் தானும் சுற்றமுறப் பாடப்படும் பெண்பாற் பிள்ளைக்கவி''
என்று பிள்ளைத்தமிழுக்கு இலக்கணம் கூறுகின்றது.

18ஆம் நூற்றாண்டில் தோன்றிய தொன்னூல் விளக்கம் என்னும் நூல்

"பிள்ளைக் கவியின் பெற்றியைக் கூற
சுற்ற வகுப்பொடு தெய்வம் கொலைகாப்ப
ஒற்றைப் படமூன்று ஆதி மூவேழ்
ஈரும் மதியினும் ஐந்தேழ் ஆண்டினும்
காப்புச்செங் கீரை தால்சப் பாணி
முத்தம் வாரானை அம்புலி சிறுபறை
சிற்றில் சிறுதேர் ஆடவர்க்கே; கடை
மூன்றொழித்து அரிவையர்க்கு ஆழ்கழங்கு அம்மானை
ஊசல் என்றுஇவை; அவ்விரு பாற்குப்
பத்துஉறுப் பாய்ஒவ் வொன்று விருத்தம்
பப்பத் தாகப் பாடல் என்ப." (25/)

என்று பிள்ளைக்கவிக்கு இலக்கணம் கூறுகின்றது.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய **பிரபந்த தீபிகை** என்னும் நூல்

"மாதம் இருதிங்களில் காப்பு, ஐந்துசெங்கீரை
 மாதம் ஏழில் தாலமாம்,
வரைநவம் சப்பாணி முத்தமோ பன்னொன்று,
 வாரானை சம்வற்சரம்,
ஓதுஒன்றரை வருடம்இந்து, இரண்டில்சிற்றில்,
 ஒலிபறை முழக்கல் மூன்றில்
ஊர்இரதம் நாலில் ஆண்பால்; கழங்குஅம்மானை
 ஊசல்பெண் பாலதாகுமே"

என்று பிள்ளைக்கவிக்கு இலக்கணம் பகர்கின்றது.

**முத்துவீரியம்** என்னும் நூல் "காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர், இவற்றை முறையே ஆசிரியவிருத்தத்தால், பத்துப் பத்தாகக் கூறுவது ஆண்பாற் பிள்ளைக் கவியாகும். இவ்வுறுப்பினில் இறுதி மூன்றொழித்துக் கழங்கு, அம்மானை, ஊசல் என்றிவற்றைக் கூட்டி முற்கூறியவாறே கூறுவது பெண்பாற் பிள்ளைக்கவியாகும்" என்று பிள்ளைக்கவிக்கு இலக்கணம் கூறுகின்றது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய **சாமிநாதம்** என்னும் இலக்கண நூலில், "காப்பு முதல் சிறுதேர் வரை (காப்பு, செங்கீரை, தாலாட்டு, சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறைமுழக்கல், சிற்றில் சிதைத்தல், சிறுதேர்

உருட்டல்) ஆண்பாற்பிள்ளைத்தமிழுக்கு உரியன. பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குப்பின் மூன்று பகுதி இல்லாமல் கழங்கு அம்மானை, ஊஞ்சல் என்ற மூன்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். பிள்ளைக்கவி வகுப்பானும், ஆசிரியவிருத்தத் தாலும் பாடவேண்டும்" என்று பிள்ளைக்கவிக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

பிரபந்த தீபம் என்னும் இலக்கண நூல் "காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் பத்துப் பருவங்களில் ஆசிரியவிருத்தத் தால் பத்துப்பாடல்களை ஆண்பாற் பிள்ளைத்தமிழில் பாடுவர். மகளிருக்கு இறுதி மூன்றினை ஒழித்துக் கழங்கு, அம்மானை, ஊசல் இவற்றைச் சேர்த்துப் பாடுவர். இந்திரகாளியம் ஆண்களுக்குப் பதினாறு ஆண்டு வரையும், மகளிர்க்குப் பூப்பு நிகழ்வளவும் பிள்ளைத்தமிழ் பாடப்படும் எனக்" கூறுகின்றது.

பிரபந்தத் திரட்டு என்னும் நூல் "காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, பறை, தேர், சிற்றில் என்பன ஆடவர்க்குரியனவாம். பெண்டிர்க்குப் பறை, தேர், சிற்றில் நீக்கி, கழங்கு, அம்மானை, ஊசல் கூட்டிக் கூறப்படும். ஆணுக்கு உரிய வயது முறையே இரண்டு, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, பன்னிரண்டு, பதினெட்டு, இருபத்து நான்கு, முப்பத்தாறு, நாற்பத்தெட்டு என்னும் மாத நிலையாம். ஆணுக்கு இவ்வாறு நான்கு வயது மேல் எல்லை. பெண்ணுக்கு ஆறுவயது வரை. காப்புப்பருவத்தில் தெய்வங்களைக் கூறும் போது, கொலைத் தொழிலும், துட்ட தெய்வமும் நீக்கப்பட வேண்டும். விருத்தப்பாவில் அமைய வேண்டும்" என்று பிள்ளைக்கவிக்கு இலக்கணம் கூறுகின்றது.

பிங்கல நிகண்டு என்னும் நூலில்

"பிள்ளைப் பாட்டுத் தெள்ளிதிற் கிளப்பில்
திங்க ளிரண்டிற் தெய்வம் காக்கென
இன்றமிழ்ப் புலவர் இயம்பிய காப்பும்
ஐந்தாம் திங்களிற் செங்கீரை யாடலும்
ஆறும் திங்களிற் கூறுதல் கற்றலோ
டேழாம் திங்களில் இன்னமு தூட்டலும்
எட்டாம் திங்களி னியற்று லாட்டலும்

ஒன்பதாம் திங்களில் உயர்சப் பாணியும்
பத்திஞே டொன்றில் முத்தங் கூறலும்
ஆண்டு வரையி னீண்டுவரு கென்றலும்
மதியீ ரொன்பதின் மதியை யழைத்தலும்
இரண்டா மாண்டிற் சிறுபறை கொட்டலும்
மூன்றும் ஆண்டிற் சிற்றில் சிதைத்தலும்
நாலா மாண்டிற் சிறுதேர் உருட்டலும்
பத்திற் பூணணி பன்னீ ராண்டினிற்
கச்சொடு சுரிகை காமுறப் புனைதலென்
றின்னவை பிறவு மாகு மிவற்றுள்
முன்னர் மொழிந்த வொழிந்தவற் ரேடும்
பெற்ற வாண்பாற் பிள்ளைப் பாட்டாம்
மூன்னுறக் கிளந்த ஆண்டி னுன்வரை
இசைத்த பாடல் இருபாற்கும் உரித்தே''

'' பேணும் சிறப்பிற் பெண்மக வாயின்
மூன்று மாண்டிற் குழமண மொழிதலும்
ஐந்தின் முதலா மொன்பதின் காறும்
ஐங்கணைக் கிழவனை யார்வமொடு நோற்றலும்
பனிநீர் தோய்தலும் பாவை யாடலும்
அம்மனை கழங்கு பந்தடித் தாடலும்
சிறுசோ றடுதலுஞ் சிற்றில் இழைத்தலும்
ஊச லாடலும் என்றிவை யுள்ளிட்டுப்
பேசிய பெண்பாற் பிள்ளைப் பாட்டே''

என்று பிள்ளைத் தமிழுக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

பாரதி தீபம் என்னும் நூலில்

'' திங்கள் இரண்டினி லைந்தினி லேழி லொன்பதினி
லங்கொரு பத்தொன்றிற் காப்புச்செங் கீரை யமுதுடன்
தங்குசப் பாணிமுத் தங்கூற லாண்டு தனிற்பதல்வ
விங்கெதிர் வாவெனல் பூச்சூட்டல் திங்களோ ரெட்டினிலே.''

'' ஆண்டிரண் டுற்ற சிறுபறை கொட்ட லணுகியமூ
வாண்டினிற் கோழகந் தான்செய்தல் சிற்றி லழித்த லைந்தா
மாண்டின்மை யாடல் சுரிகைமெய் சேர்த்த லவையவையவ்
வாண்டினிற் பாடுத லாண்பிள்ளைப் பட்டுக் கடைவதுவே.''

" முன்னவை யாண்டின் முடித்தலவ் வாண்டெல்லை மூன்றுதள்ளி
லுன்னு கும்பக னைந்தொட தெல்லையி னேங்குவில்வே
டன்னை வழிபட னீராடல் தண்கட லாடல்சிற்றில்
பன்னல மன்னுசெம் பொன்னூசல் பெண்பிள்ளைப் பாட்டெனபரே'

என்று பிள்ளைத் தமிழுக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

இதுகாறும் கூறப்பட்ட பிள்ளைத் தமிழின் இலக்கண விதிப்படி ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்கள் காப்புப்பருவம், செங்கீரைப்பருவம், தாலப்பருவம், சப்பாணிப் பருவம், முத்தப்பருவம், வருகைப்பருவம், அம்புலிப்பருவம், சிறுபறைப்பருவம், சிற்றில் பருவம், சிறுதேர்ப்பருவம் ஆகப் பத்து என்பதையும், பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய பருவங்கள் காப்புப்பருவம், செங்கீரைப்பருவம், தாலப்பருவம், சப்பாணிப்பருவம், முத்தப்பருவம், வருகைப்பருவம், அம்புலிப் பருவம், கழங்குப் பருவம், அம்மானைப்பருவம், ஊசற் பருவம் ஆகப் பத்து என்பதையும் அறிகின்றோம். ஒவ்வொரு பருவமும் குழந்தை பிறந்த மூன்று மாதங்களிலிருந்து ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்து, பத்தொன்பது, இருபத்தொன்று ஆகிய ஒற்றைப்பட்ட மாதங்களில் முறையே பாடவேண்டும் என்பதையும், சந்த விருத்தத்தாலும் ஆசிரிய விருத்தத்தாலும் பாட வேண்டும் என்பதையும் அறிகிறோம்.

காப்புப்பருவம் பாடும் முறையைப்பற்றி இலக்கண விளக்கம்

" மங்கலம் பொலியும் செங்கண் மாலே
சங்கு சக்கரம் தரித்த லானும்
காவற் கடவுள் ஆக லானும்
பூவினள் புணர்த லானும்முற் கூறி,
கங்கையும் பிறையும் சுடுக்கையும் புனைஉமை
பங்கனென்று இறைவனைப் பகர்ந்து முறையே
முழுதுஉலகு ஈன்ற பழுதுஅறும் இமயப்
பருப்பதச் செல்வியை விருப்புற உரைத்து
நாமகள் கொழுநன், மாமுகில் ஊர்தி,
ஒற்றைக் கொம்பன், வெற்றி வேலன்
எழுவர் மங்கையர், இந்திரை, வாணி
உருத்திரர் அருக்கர் மருத்துவர் வசுக்கள்
பூப்புனை ஊர்தியில் பொலிவோர், அனைவரும்
காப்ப தாகக் காப்புக் கூறல்''

என்று கூறுகின்றது.

திருவாவடுதுறை மாசிலாமணி தேசிகர் இயற்றிய திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ்க்காப்புப் பருவம், பிரமீசர் திருநிலைநாயகி, திருநீறு, கான்மாறியாடிய கடவுள், சிற்சத்தி விநாயகக்கடவுள், முருகக்கடவுள், திருப்பொய்கை, பன்னிரு திருப்பெயர்ப் பழம்பதி, திருப்பதிகம், சட்டைநாதர் மற்றைத் தெய்வங்கள் ஆகிய இவர்கள் காக்க எனப் பதினொன்று பாடல்களைக் கொண்டுள்ளது.

காஞ்சிபுரம் ஸ்ரீ சிதம்பரமுனிவர் இயற்றிய ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள் க்ஷேத்திரக்கோவைப்பிள்ளைத்தமிழ், திருமால், பரமசிவன், உமையம்மை, கங்கை, விநாயகர், வயிரவர், வீரபத்திரர், பிரமன், காளி, முப்பத்துமுக்கோடி தேவர்கள் ஆகிய தெய்வங்கள் காக்க எனப் பத்துப்பாடல்களைக் கொண்டு திகழ்கின்றது.

திரிசிரிபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றியுள்ள சேக்கிழார் பிள்ளைத் தமிழில் நூலின் காப்புப்பருவத்தில் தெய்வங்களைக் காப்புத் தெய்வமாக வைத்துப் பாடாமல் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியுள்ள திருத் தொண்டத்தொகையிலுள்ள நாயன்மார் அனைவரும் காக்க என்று பாடியுள்ளார். இவ்வாசிரியர் திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர்மீது இயற்றியுள்ள பிள்ளைத் தமிழிலும் பாட்டியல் கூறும்முறைப்படி அமைக்காமல் திருநந்தித் தேவர், சனற்குமார முனிவர், சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதி முனிவர், மெய்கண்டார், அருணந்தி சிவாசாரியர், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவம், அருணமச்சிவாயர், சித்தர்சிவப் பிரகாசர், நமச்சிவாய மூர்த்திகள் முதலிய பதினால்வர் ஆகிய சுத்தாத்துவித சைவ சித்தாந்த ஆசாரியர்களைக் காப்புக் கடவுளராக அமைத்துப் பதினொன்று பாடல்கள் பாடியுள்ளார்.

ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகள் இயற்றியுள்ள குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் நூலில் காப்புப்பருவத்தில், திருமால், சிவபெருமான், விநாயகக்கடவுள், முருகக்கடவுள், பிரமதேவர், தேவேந்திரன், இலக்குமி, சரசுவதி, காளி, சத்தமாதர், முப்பத்துமுக்கோடி தேவர் ஆகிய தெய்வங்கள் காக்க எனப் பதினொன்று பாடல்கள் உள்ளன.

வைகுந்த நாதன் பிள்ளைத்தமிழ் நூலாசிரியர் காப்புப் பருவத்தில் தெய்வங்களைக் காப்புத்தெய்வமாக வைத்துப் பாடாமல் நம்மாழ்வார், சரசுவதி, ஆண்டாள், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், மதுரகவியாழ்வார், இராமானுசர். பெரியநம்பி, மணவாளமாமுனி ஆகிய இவர்களைக் காப்புத் தெய்வங்களாக அமைத்துப் பதினொன்று பாடல்கள் பாடியுள்ளார்.

இந்நூலாசிரியரும் காப்புப்பருவத்தில் திருமால், விநாயகர், முருகன், பிரமன், திருமகள், கலைமகள், சத்தமாதர்கள், திருநீறு, முப்பத்துமுக்கோடி தேவர்கள் ஆகியோர் காக்க எனப் பத்துப் பாடல்களையுடையதாகக் காப்புப் பருவத்தைப் பாடியுள்ளார்.

இவர் திருநீற்றைத் தெய்வமாகப் பாவித்துப்பாடியிருப்பது போற்றத்தக்கது.

வகுப்புப்பாவால் பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் நூல்கள் கிடைத்தில. இவர் காப்புப்பருவம் இரண்டாவது பாடலை வகுப்புப்பாடலாக அமைத்துள்ளார். இதே போன்று சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்க் காப்புப்பருவத்தில் கங்காதேவி மீது பாடப்பட்ட செய்யுளும், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழின் காப்புப்பருவத்தில் சிவபெருமான், முப்பத்துமுக்கோடி தேவர்கள்மீது பாடப்பட்ட செய்யுட்களும் வகுப்புப்பாவால் அமைந்துள்ளன.

"குழவி மருங்கின் கிழவதாகும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு உரை கண்ட நச்சினார்க்கினியர் ஆண்பால் பிள்ளைத்தமிழுக்குரிய பருவங்களை விளக்கினார். பெண்பால் பிள்ளைத்தமிழுக்குரிய இறுதி மூன்று பருவங்களைக் குறிப்பிடவில்லை. ஆகவே அவர் காலத்தில் பெண்பாற் பிள்ளைத்தமிழ் பத்துப் பருவங்கள் உள்ளனவாகப் பாடப்படவில்லையென்பது தெரிகின்றது.

பழைய இலக்கியங்களில் பெண்பாற்பிள்ளைத்தமிழுக்குரிய கரு உண்டு. சிலப்பதிகாரத்தில் அம்மானை ஊசல் பற்றிய குறிப்பு தெள்ளத்தெளிவாக இருக்கின்றது. மணிவாசகப்

பெருமானும் திருவாசகத்தில் அம்மானைப்பருவ, ஊசல் பருவக் குறிப்புக்களை அமைத்துள்ளார்.

சைவசமயக் குரவர்களுள் ஒருவரான திருஞான சம்பந்தர் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய சான்றுகளைத் தமது திருப்பதிகங்களில் அமைத்துள்ளார்.

**பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடைய மலைச்செல்வி பிரியாமேனி**
**அருந்தகைய சுண்ணவெண்ணீ றலங்கரித்தான் அமரர்தொழ**
**அமருங்கோயில்**
**தருந்தடக்கை முத்தழலோர் மனைகள்தொறும் இறைவனது**
**தன்மைபாடிக்**
**கருந்தடங்கண் ணார்கழல்பந் தம்மானைப் பாட்டயரும் கழுமலமே.**

(தேவாரம்)

இதுகாறும் சொல்லப்பட்டவைகளைக் கொண்டு சங்ககாலத்திலிருந்து பிள்ளைத்தமிழ் பாடும் வழக்கம் உண்டு என்பது தெரிகின்றது.

12ஆம் நூற்றுண்டில் ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்ட "குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ்" என்ற நூல் ஒன்றே பத்துப்பருவங்களும் அமையப் பெற்ற முதற் பிள்ளைத்தமிழ் நூல் ஆகும்.

பிள்ளைத்தமிழ் பாடும் புலவனின் அறிவாற்றல் சிறந்து விளங்குமிடம் அம்புலிப் பருவமாகும். இதனை ஔவையார் வாக்காகக் கூறப்படும் "காசினியில் பிள்ளைக்கவிக் கம்புலி புலியாம்" என்று கூறியிருப்பதன் மூலம் அறியலாம். பிள்ளைத் தமிழிலுள்ள அம்புலிப்பருவம் ஏனைய பருவங்களைப் போல் பாட்டுடைத் தலைவரைக் குழந்தையாகப் பாவித்துப் பாடப் படும் முறையில் அமையாமல் அம்புலியை விளித்துக் குழந்தையுடன் ஆடவருமாறு அழைக்கும் முறையில் அமைந்திருக்கும். அன்றியும், இதில் அரசர் கைக்கொள்ளும் சாம, பேத, தான, தண்ட முறைகளையும் அமைத்துப்பாட வேண்டும். சிலேடை அணியும் அமைந்திருக்கவேண்டும்.

**பிள்ளைத்தமிழ் :—**

கடவுளரையேனும், ஆசிரியரையேனும், உபகாரிகளை யேனும் குழந்தையாகப் பாவித்துக் காப்பு முதலிய பத்துப் பருவங்கள் அமைத்துப் பருவத்திற்குப் பத்துப் பத்துப் பாடல்கள் வீதம் அமைத்துப் பாடுவது பிள்ளைத்தமிழ்.

திருமால் முதலிய தெய்வங்கள் பாட்டுடைத் தலைவராகிய குழந்தையைப் பாதுகாக்க வேண்டும் என்று அமைப்பது காப்புப் பருவம். திருமால் காத்தல் கடவுள் ஆதலின் காப்புப் பருவத்தின் முதற் செய்யுளை அவரது காப்பாக அமைப்பது மரபு. தீவிரச் சைவப் பற்றுடையவர்கள் இம்முறையை மாற்றியமைத்துப் பாடுவதும் உண்டு. அப்படிப்பாடினும் இழுக்கன்று என்று தெரிகிறது.

குழந்தை பிறந்த ஏழாவது நாள் காப்பிடல் என்னும் வழக்கம் இருக்கிறது. அதனையொட்டி இலக்கிய வழக்கில் அமைந்தது இக்காப்புப்பருவம். இது மூன்றும் திங்களில் கூறப்படும்; இரண்டாம் திங்கள் என்பாரும் உளர்.

இரண்டாவது செங்கீரைப் பருவம் என்பது. பொருள் தெரியாது ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பது. இளங் குழந்தை "ங்க்" "ங்க்" என்று கூறக் கேட்டுத் தாய்மார்கள் உவக்கும் பருவம் இது. இவ்வொலி மழலையைக் காட்டிலும் இளம்பருவத்தையுடையது. மழலை ஒருவகையில் பொருள் அறிதற்கரியது. இவ்வொலி வெறும் ஒலிமாத்திரையாய்த் தோற்றுவது, தொடையமைதியில்லாத தொன்றைச் செந் தொடை என்பது போல, சொல்லுக்குரிய அமைதியில்லாத வற்றைச் செங்கீர் என்றனர் போலும்: கீர்–சொல். செங் கீரையை ஒரு நிருத்திய விசேடம் என்று சொல்லுவர் பெரியவாச்சான் பிள்ளை. 'செங்கீரையாடுக' என்னும் வழக்கை நோக்கின் அதனைக் குழந்தைகள்பால் இயல்பின் அமைந்த ஆடல் விசேடம் என்றே கொள்வது பொருந்தும். இவ்வாடலை

" ஒருதா ளூன்றி யெழுந்திரு கையும்
ஒருங்கு பதித்து நிமிர்ந்
தருள்மொழி திருமுக மசைய அசைந்தினி
தாடுக செங்கீரை" என்பர் ஸ்ரீ குமரகுருபரர்.

" இருகைமல ரும்புவி பதித்தொரு முழந்தாள்
இருத்தியொரு தாண்மேனிமிர்த்
திந்த்ரதிரு விற்கிடை தொடுத்தவெண் தரளநிரை
ஏய்ப்பநுதல் வேர்பொடிப்பத்
திருமுக நிமிர்த்தொரு குளந்தையமு தாம்பிகை
செங்கீரை யாடியருளே"

என்னும் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்ப் பாடலாலும் அறியலாம்.

**மூன்ருவது தாலப்பருவம்:—** தாலாட்டு என்பது தால் என மருவியது. குழந்தைகளைத் துயிலச் செய்வார் தம் நாவை அசைத்துப் பாட்டுப்பாடுவது வழக்கம்.

"சிறிய பருமணித் தொட்டிலேற்றித் தாலாட்டி" என்பர் ஸ்ரீ குமரகுருபரர்.

இதற்கெனவே தாலாட்டெனத் தனிப்பாட்டுக்களின் தொகுதி சில வழங்குகின்றன. திவ்யப்பிரபந்தத்தில் அவற்றைக் காணலாம். தாலோ தாலேலோ என்னும் அநுகரணத்துடன் இப்பருவப்பாட்டுக்கள் முடிகின்றன. தால்–நாக்கு. தாலாட்டுப் பருவம் என்பது தாலப்பருவம் என நின்றது.

**நான்காவது சப்பாணிப்பருவம்:—** சப்பாணி கொட்டும்படி குழந்தையிடம் கூறுவதாக அமைப்பது இது. (ஸ:பாணி) கையோடு கை சேர்த்துக் கொட்டுவது என்பது அச்சொற் பொருள். கால்வலியின்றிக் கைவலிமை கொண்டு நகர்ந்து செல்லும் குழந்தைகளைச் சப்பாணி என்று கூறும் வழக்கை யறிக.

ஐந்தாவது முத்தப்பருவம்:-குழந்தையை முத்தம் தா என்று தாயரும் பிறரும் வேண்டுவதாகக் கூறுதல் மரபு. முத்தம் என்னும் சொல் முத்தையும் குறித்தலின் முத்துப் பருவத்தில் புலவர்கள், 'பிறவிடங்களில் கிடைக்கும் பல வகை முத்தங்களிலும் நின் வாய்முத்தமே சிறந்ததாதலின் அதனைத் தருக' என்று அமைத்தல் வழக்கம்.

ஆருவது வருகைப்பருவம்:– தளர்நடையிட்டு வரும் குழந்தையை வாவென்று அழைப்பதாகக் கூறுவது இப் பருவச் செய்தி. இது வாரானைப்பருவம் என்றும் வழங்கப் பெறும்.

ஏழாவது அம்புலிப்பருவம்:– சந்திரனைக் குழந்தையோடு விளையாட வாவென்று அழைத்தலைக் கூறுவது. அம்புலி-சந்திரன். இப்பருவம் ஏனைய பருவங்களைக் காட்டிலும் பாடற் கரியதென்பர். "பிள்ளைக் கவிக்கம்புலி புலியாம்" அம்புலியை அழைக்கையில் சாம பேத தான தண்ட வகையால் முறையே அம்புலிக்கும் பாட்டுடைத் தலைவருக்கும் ஒப்பக் கூறுதலும், வேற்றுமை கூறுதலும், வாராவிடின் நிகழும் துன்பம்

2466—2

கூறுதலும் மரபு. சாமம் என்பதற்கு இன்சொல் என்று பொருள் கூறுவர். அஃது ஒப்பில் அடங்கும். முத்துக் குமார சுவாமி பிள்ளைத்தமிழில் இம்முறையைக் காணலாம்.

இவ்வேழு பருவங்களும் இருவகைப்பிள்ளைத் தமிழுக்கும் பொது. மேல், பெண்பாற் பிள்ளைத்தமிழில் அம்மானைப் பருவம், நீராடற் பருவம், ஊசற் பருவம், என்பவற்றையும், ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றிற்பருவம், சிறுபறைப்பருவம், சிறுதேர்ப்பருவம் என்பவறறையும் அமைத்தல் மரபு.

அம்மானைப் பருவமானது பாட்டுடைத் தலைவியை அம்மானை ஆடும்படி கூறுவது. மகளிருக்கே உரிய இவ் விளையாட்டை வேறு இடங்களிலும்

**" பணிமலர்க் குழலியார் பளிக்குப்**
**பானிலா முன்றிற் றூகிலாமுத்தின்**
**பந்தரிற் கண்ணிமை யாடா''** (மதுரைக் கலம்பகம், 63.)

**" தருநிழற் செய்த வரமிய முற்றத்**
**தமரர் மாதரோ டம்மானை யாடுழி''**

சிதம்பர மும்மணிக்கோவையிலும் வருதல் காண்க.

நீராடற் பருவத்தில் பாட்டுடைத் தலைவியை நீராட வேண்டுமென்று வேண்டுதலும், ஊசற்பருவத்தில் ஊசலாட வேண்டுதலும் காணப்படும். ஊசல் (ஊஞ்சல்) என்பது மகளிர்க்குரியதொரு விளையாட்டு.

**திருநாங்கூர் :—**

வைப்புத்தலம். இவ்வூர் தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவெண்காட்டிற்கு மேற்கிலும், திருக்கடவூருக்கு நேர் வடக்கிலும், சீகாழிக்குத் தெற்கிலும், மாயூரத்திற்கு வடகிழக்கிலும், வைத்தீசுவரன் கோயிலுக்குத் தென்கிழக்கிலும் உள்ளதாக இவ்வாசிரியர் வருகைப் பருவத்தில் மூன்றும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

நாங்கை என்று திவ்யப் பிரபந்தங்களில் வழங்குகின்றது. நாஹபுரி என்று வடமொழியில் கூறப்படும். இவ்வூரில் முற் காலத்தில் மதங்கர் என்ற டெயருள்ள முனிவர் ஒருவர் தவம் புரிந்து கொண்டிருந்தார் என்றும், அதுபற்றி **மதங்காசிரமம்**

என்று கூறப்படும் என்றும் பெரியோர்கள் சொல்வார்கள். இங்குள்ள சிவாலயங்களுள் ஒன்றில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமானுக்கு மதங்கேசுவரர் என்பது திருப் பெயராக அமைந்திருக்கிறது. பதினொன்று சிவாலயங்கள் இருந்தன என்றும் ஆனால் இப்பொழுது மூன்று சிவாலயங்கள் தான் உள்ளன என்றும் தெரியவருகிறது. பதினொன்று விஷ்ணு ஆலயங்கள் உள்ளன.

இங்குள்ள விநாயக மூர்த்தியொருவர்க்கு நாலாயிரத்தொருவர் என்பது திருப்பெயர். இவ்வூருக்குத் தெற்கு எல்லையில் மணிகர்ணிகை நதி, வடவெல்லை மண்ணியாறு. மேற்கு எல்லை காத்தியாயனர் இருப்பு என்னும் ஊரும் உள்ளது. கரிகாற் பெருவளத்தான் நாங்கூர் வேளிரின் மகளைத் திருமணம் செய்து கொண்டதாகத் தெரியவருகின்றது. "மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு உரை எழுதிய உச்சிமேற் புலவர் நச்சினார்க்கினியர் தம் உரையில் "உழுவித்துண்போர் மண்டில மாக்களுந் தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும், அழுந்தூரும் நாங்கூரும் நாவூரும், ஆலஞ்சேரியும், பெருஞ் சிக்கலும் வல்லமும் கிழாரும் முதலிய பதியிற்றோன்றி வேளெனவும், அரசெனவும், உரிமையெய்தினோரும், பாண்டிய நாட்டுக் காவிதிப்பட்டமெய்தினோரும், குறுமுடி குடிப் பிறந்தோர் முதலியோருமாய் முடியுடைவேந்தர்க்கு மகட் கொடைக்குரிய வேளாளராம். "இருங்கோ வேண்மானருங்கடிப் பிடவூர்" எனவும் "ஆலஞ்சேரி மயிந்த னூருண்கேணி நீரொப்போன் எனவும் சான்றோர் செய்யுட் செய்தார்; உருபல்பஃறேர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட்கோடலும் அவன் மகனாகிய கரிகாற்பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட்கோடலுங் கூறுவர்" எனவும் "வேளாளர் பகைவர் மேலும் நாடுகாத்தல்மேலும், சந்து செய்வித்தன்மேலும் அரசரேவற்படி செல்லுதற்குரியர்" என்று கூறுகின்றார். "இவற்றால் வேளாளருட் பலரைத் தமிழ்ப் பெரு வேந்தர் தம் அரசியலில் உயர்நிலையில் வைத்து மதித்து வந்ததோடு அவரினத்துச் சிற்றரசரான வேளிருடைய பெண்களை அவ்வேந்தர் விரும்பி மணம்புரிந்து வந்தனர் என்பதும் அறியலாம். சோழரைப் போலவே சேரர் பலரும் இக்குலமகளிரையே மணம்புரிந்து வந்தனர் என்பது

வெளியன் வேண்மாள், இளங்கோவேண்மாள், வேண்மாள், அந்துவஞ்செள்ளை எனப் பதிற்றுப்பத்தில் சேரமனைவியர் பெயர்களால் அறியலாம்" என்று திரு. மு. இராகவையங்கார் எழுதியுள்ள வேளிர் வரலாறு என்ற நூலிலிருந்து அறிய முடிகிறது.

இந்நூலாசிரியரும் வேளாளரைப்பற்றி 49 ஆம் பாடலில் "குவளையந் தாரணியும் வேளாளர் வாய்மையில் குன்றாகள்" என்று கூறுகின்றார். இதுகாறும் கூறியவற்றால் நாங்கூரில் வேளாளர் பலர் இருந்தனர் என்றும் பொய் பேசாதவர்கள் என்பதும் அறியவரும் செய்திகளாகும்.

"முத்துக்கள் கடைத்தெருவிற் சொரிந்து கிடக்கப் படுமதனால்" (செ. 45) என்ற அடியால் நாங்கூரின் கடைத் தெருவில் ஏராளமான முத்துக்குவியல்கள் இருந்தன என்று கூறுகின்றார். இதே கருத்தினை திருமங்கை மன்னனும் "கொடிகள் அணிந்த மாளிகைகள் நிறைந்த வீதியிலே சிறந்த முத்துக்களை வெளுத்த நெல்லுக்குத் தருகிறோம் என்று சொல்லிக் கொண்டு ஒவ்வொரு வீட்டு வாசலிலும் போய், குறத்திகள் விற்பனை செய்கின்ற நாங்கைமாநகர்" என்று கூறுகின்றார். இவ்விருவருடைய கூற்றுக்களிலிருந்தும் நாங்கை, மாநகரின் செல்வச் சிறப்புத் தெளிவாக விளங்கு கின்றது. அரி, அயன், அரன் என மூன்று மூர்த்திகளிருந் தாலும் ஆச்ரயிக்கத்தக்கவள் தேவியே என்று தெளிந்து மதங்கமுனிவர், கார்த்தியாயனர் முதலான மகரிஷிகளும் தேவர்களும் வந்து போற்றும் தலம் இந்நாங்கைமாநகரே யாகும்.

இவ்வூர் சீகாழியிலிருந்து 10. கி. மீ. தொலைவில் இருக்கிறது. இங்கு நாலாயிரம் மக்கள் வாழ்ந்திருந்ததாக "நாங்கை நாலாயிரம்" என்ற பழமொழியால் தெரிய வருகின்றது.

சைவசமயக் குரவர்களுள் ஒருவரான சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருநாட்டுத் தொகையில்

"தேங்கூருந் திருச்சிற் றம்பலமுஞ் சிராப்பள்ளி
பாங்கூர் எங்கள்பி ரான்உறையுங் கடம்பந்துறை
பூங்கூ ரும்பரமன் பரஞ்சோதி பயிலும்ஊர்
நாங்கூர் நாட்டுநாங்கூர் நறையூர் நாட்டுநறையூரே" என்றும்

" தாங்கூர் பிணிகின் அடியார்மேல் அகல அருளாயே
வேங்கூர் உறைவாய் விளமர் நகராய் விடையார் கொடியானே
நாங்கூர் உறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம்பானே
பாங்கூர் பலிதேர் பரனே பரமா பழனப் பதியானே'' என்று

ஊர்த்தொகையிலும் பாடியுள்ளார்.

மதங்க முனிவருடைய தவத்தைக் கலைக்கும்பொருட்டு நாராயணன் மோகினி வடிவம் கொண்டு வந்ததாகவும், மோகினி வடிவோடு இருக்க முனிவர் சாபம் கொடுத்ததாகவும் அதனுல் மதங்கேசுவரர் ஆலயத்தில் நாராயணன் மோகினி வடிவத்தோடு உள்ளதாகவும் உள்ள சிலை யொன்று உள்ளது. இன்னும் பல சிவாலயமிருந்து கிலமாய்ப் போனதாய்த் தெரிய வருகிறது. இத்தலத்தில் கீழ்த்திசை நோக்கிய சிவலிங்கத்துக்கு எதிரேயுள்ள பலி பீடத்தில் முறைப்படி மேற்றிசை நோக்கியிருக்கும் நந்தியோடு கீழ்த்திசைநோக்கியும் ஒரு நந்தி இருக்கிறது.

" மத்தளை தயிருண் டானும் மலர்மிசை மன்னினுனும்
நித்தமும் தேடிக் காணு நிமலனே அமலமூர்த்தி
செய்த்தளைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்தனிட்ட
கைத்தளை நீக்கி என்முன் காட்டுவெண் காட்டுளானே''

என்ற பட்டினத்தார் பாடலால் நாங்கூர் சேந்தனுர் இவ்வூரினர் என்று தெரிகிறது.

மதங்கேசுவரர் சுவாமி பெயர்; அம்பிகை—மையாடுகண்ணி

இவ்வாலயத்தில் சக்தி வாய்ந்த காளிகாதேவி ஊஞ்சலில் அமர்ந்திருக்கும் கோலத்தில் காட்சியளிக்கிருள். இக்காளிகா தேவிக்கு இவ்வூரிலுள்ள செங்குந்தர்களால் வருடந்தோறும் கும்பபூசையும் ஐந்தாண்டுக்கு ஒருமுறை காளிகட்டி உற்சவமும் நடத்தப்படுகின்றன. சக்திவாய்ந்த இக்காளிகா தேவியை வெளியூரிலிருந்தும் மக்கள் வந்து தரிசனம் செய்து செல்கிருர்கள்.

இவ்வூரில் அசுவமேதயாகம் ஒன்று நடந்ததாகவும் ஒரு வரலாறு கூறப்படுகிறது. இவ்வூரில் முன்காலத்தில் நாலாயிரம் முனிவர்கள் தங்கியிருந்து தவம் செய்ததாகவும், அங்கு ஒருவர் சமாதி அடைய அவ்விடத்தில் ஒரு சிறிய கொட்டகை

போடப்பட்டிருந்ததாகவும் சுமார் எண்பது ஆண்டுகளுக்கு முன்பு ந. சொக்கலிங்கம் என்பவர் கனவில் சிவபெருமான் தோன்றி அவ்விடத்தில் ஓராலயம் அமைக்குமாறு பணித்திட, அதன் காரணமாக அந்தப் பெரியவர் சமாதி அடைந்த இடத்தில் ஆலயம் அமைக்கப்பட்டு அவ்வாலயத்திற்கு நாலாயிரத்து ஒரு பிள்ளையார் கோவில் என்று பெயர் ஏற்பட்ட தாகவும் கர்ண பரம்பரைச் செய்தி வழங்குகிறது. இவ்வாலயத் தில் தேவலோகத்திலிருந்து சங்கநிதி பதுமநிதி இரண்டும் வந்ததாகக் கோயிலின் உட்புறத்தே இரண்டு சிலைகள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாலயம், ஊரின் கிழக்கே உள்ளது.

இத்தலம் காவிரியாற்றுக் கால்வாய்களின் பெருக்கால் நீர்வளம், நிலவளம், பொருந்தியுள்ளது. முத்தீயை வளர்க் கின்ற மறையோர்கள் நிறைந்த ஊர் என்று இந்த நூல் மூலமாகவும், பெரிய திருமொழியின் மூலமாகவும் தெரிகிறது.

இவ்வூர் கடலோரத்தில் இருப்பதால் கடலோதம் நிறைந் திருக்கிறது. கமுகு, தென்னை ஓங்கி வளர்ந்திருக்கின்றன. மந்திகள் தம் குட்டிகளுடனே வாழைகளிலும், மாமரங்களிலும் தாவித்திரிந்து பழங்களைத் தின்கின்றன.

இவ்வூரில் கரும்போடு சமமாக ஓங்கி வளர்கின்ற செந்நெற் பயிர்களை உடைய வயல்கள் நிறைந்திருக்கின்ற பொய்கை களின் பக்கங்களிலெல்லாம் சோலைகள் செழித்திருக்கின்றன. பெருந்தொகை என்னும் நூலில் நாங்கையைப் பற்றி உள்ள ஒரு பழைய பாடல்

“ நாளை வரகுணர்கோ னுங்கையிலே தங்கலாம்
மீளும் அமரும் விடிந்துபோம்— நீளமுமோர்
அம்பிட் டெயுந்தூர மவ்வூர் அயில்வேற்கட்
கொம்பிற்குங் காலாறக் கொண்டு”

“ தேங்குபுகழ் நாகூர் சிவனேவில் லாளியப்பா
நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ- போங்காணும்
கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை யல்லாமல்
சோறுகண்ட மூளியார் சொல்.”

என்ற ஒரு தனிப்பாடலும் நாங்கூரின் சிறப்பினைக் கூறுகின்றது.

இத்தலத்தைப் பற்றித் தோன்றிய புராணங்கள் இரண்டு. ஒன்று நாங்கூர்த் தலபுராணம்; மற்றொன்று பாசவனப் புராணம். இவ்விரண்டு நூல்களில் பதின்மூன்று சிவபீடங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன என்று தெரிய வருகின்றது. இந்நூல்களைப் பற்றி மேற்கொண்டு அறிய முடியவில்லை. இப்பொழுது மூன்று சிவாலயங்கள்தான் உள்ளன. மற்றவை காலத்தால் இடிந்து அழிந்து போய் விட்டனவாம். அம்மூன்று சிவாலயங்களாவன

1. மதங்கேசுவரர் ஆலயம் – சுவாமி பெயர் – மதங்கேசுவரர். அம்பிகை - மையாடுகண்ணி.

2. சுவாமிபெயர் - நம்புவார்க்கன்பர் அம்பிகை -நம்பிப் பிரியாள்.

3. சுவாமிபெயர்:- அமிர்தபுரீசுவரர். அம்பிகை - அமிர்த கரவல்லி.

திருநாங்கையில் காத்தியாயனர் இருப்பு என்று ஓரிடம் உள்ளது. அங்குள்ள கோயிலின்கண் எழுந்தருளியுள்ள சுவாமியின் பெயர்:— பொன்னுக்கு ஒளித்தார். அம்பிகை பெயர்:— பொன்னளந்த நாயகி (வடமொழிப்பெயர்: சொர்ண நாயகி) ஸந்நிதி கிழக்கு முகம்; கர்ப்பக்கிரகம் ஸந்நிதிக்குச் சற்று விலகியிருக்கிறது என்று ஐயரவர்கள் எழுதிவைத்துள்ள குறிப்புக்களிலிருந்து தெரிய வருகிறது. ஆசிரியர் இங்குள்ள அம்பிகையின் பேரில் இந்நூலை இயற்றியிருக்கிறார். செல்வம் கொழிக்கும் ஊராக இருந்தமையால் ஆசிரியர் இவ்வூருக்குச் சொர்ணபுரி என்று பெயரிட்டு நூலை யாத்தனர் போலும். ஆசிரியர் வடமொழியில் மிகுந்த பற்றுடையவர் என்பது நூலின் மூலமாக அறியலாம்.

**நூலாசிரியர்:—**

இன்னாரென்று தெரியவில்லை. ஆதிசைவர் மரபில் தோன்றியவராக இருக்கலாம் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது. பல பாடல்களில் சுந்தரர் வரலாற்றினைக் கூறுகின்றார். "சைவர் சுந்தரர்" (செய். 33) இப்பாடலில் உள்ள அடைமொழியினால் இவர் சுந்தரர் மரபில் தோன்றியவர் என்று கூறலாம். நாங்கூரில் ஆதிசைவமரபினர் பலர் வாழ்ந்தனர்

என்று தெரிகிறது. இன்றும் ஆதிசைவமரபினர் தெரு ஒன்று நாங்கூரில் உள்ளது. அங்குள்ள சிவாசாரியர்களும், பக்கத்துக் கிராமங்களில் உள்ள சிவாசாரியர்களும் சேர்ந்து சுந்தருடைய திருநாளைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

இந்நூலாசிரியர் கம்பர், குமரகுருபரர் இவர்களுடைய நடையை இந்நூலில் சில இடங்களில் கையாண்டுள்ளார். ஆசிரியர் சுந்தரரிடம் மிகுந்த பற்றுடையவர் என்பதைக் கீழ்வரும் அடிகளால் அறியலாம்.

''சுந்தரர் செந்தமிழ் மகிழ்காரணியே'' (செய். 29)

''சதுரர்சுந் தரர்திருப் பாடல்கொண் மருள்செல்வி'' (செய். 32)

''சைவர்சுந் தரர்திருப் பாடல்கொண் டருள்செல்வி'' (செய். 33)

''தமிழ்நாவ லூரன்வளர் பாடல்கொண் டருள்செல்வி'' (செய். 34)

''மதுரத்தமிழ்பாடி எதிர்நின்ற சுந்தரர்'' (செய். 76)

இவ்வாசிரியர் வேதத்திலும், ஆகமத்திலும், லலிதா ஸஹஸ்ர நாமம் முதலிய தேவீ பரமான நூல்களிலும் உள்ள செய்திகளை அங்கங்கே எடுத்தாண்டிருக்கிறார்.

இந்நூலின்கண் சீகாழி, திருவெண்காடு, மாயூரம், புள்ளிருக்குவேளூர், திருக்கடவூர், மதுரை என்னும் திருத்தலச் செய்திகள் வருகின்றன. தேவாரக்கருத்துக்களும் சிற்சில இடங்களில் வருகின்றன.

ஆசிரியர் திருநாங்கையைச் சிறப்பித்துக் கூறும் பாடல்கள் பல. அவற்றுள் சிறந்ததான சில எடுத்துக் காட்டாகத் தரப்பட்டுள்ளன.

"திங்கட் கொழுந்தணிந் தொளிர்கின்ற செக்கரத்
திருச்சடா டவிமறைத்துத்
திகழுமணி முடிமீது வெண்ணூ லிழைப்பாகை
செவ்விவாய்ந் திடவணிந்து
பைங்கட் பணிப்பெருங் கங்கணம் விடுத்தொளி
பரந்தமா ணிக்கம்வயிரம்
பசியமர கதம்வைத் திழைத்தபொற் கடகம்
பரித்துத் திருச்செவிதனிற்

பொங்கித் திரட்சிபெறு முத்துக் கடுக்கன்
புனைந்துசா லுவைகள் போர்த்துப்
புலவரென வெளிவந்து நக்கீரர் முன்னின்று
பொருதுபொற் கிழிகொடுத்த
சங்கத் தமிழ்தழைத் திடுநாங்கை வாழ்செல்வி
தருகதிரு வாய்முத்தமே
தண்பொன் னளந்துவளர் பண்கொண்ட பெண்பிள்ளை
தருகதிரு வாய்முத்தமே.''

''புவனகோ டிகண்முன் படைத்தநான் முகனெனப்
பொற்புமிகு சீலநிறையும்
புங்கவன் மதங்கமுனி இந்திரன் திசைதனில்
போந்தியா கம்புரிந்து
சிவனையே டவிழுநற மலரால் அருச்சனைகள்
செய்தெண்ண நிறைவேற்றிடத்
திகழ்முனிவ ரெண்ணரிய யோகமார்க் கந்தனில்
சிந்தனை செலுத்திநிற்பக்
கவனமேற் கொண்டன்ன பூரணியை யிதயநற்
கமலா சனத்திருத்திக்
காயனலின் வேதவிதி தவறுது வேள்விபுரி
காத்தியா யனமுனிவருந்
தவநிலா வியநாங்கை மாநகர் வாழ்செல்வி
தருகதிரு வாய்முத்தமே
தண்பொன் னளந்துவளர் பண்கொண்ட பெண்பிள்ளை
தருகதிரு வாய்முத்தமே.''

''மிகுமின்ப மாப்பெருங் கதைநிறை புராணமும்
மேலான ஆகமமும்நா
விற்றழும் பேறப் படிந்துரை விரித்துண்மை
மெய்யென்று நையுமனதின்
நெகுமன்பு மேற்படர நித்தியநை மித்தியமும்
நெறியின்வழு வாதியற்றி
நிறைதிருப் பணிசெய்து மறையவர்கள் தினமும்
நியமம் புரிந்துமுத்திப்
புகும்அன் பரைக்காணில் அடிபணிந் தெதிர்நின்று
புதியதண் ணமுதமொழுகும்
புகழ்மொழிக ளாற்செவி நிறைத்துமணை யுட்கொண்டு

போந்தவர் கருத்தமைவுறத்
தகுமன்ன தானஞ்செய் திருநாங்கை வாழ்செல்வி
தருகதிரு வாய்முத்தமே
தண்பொன் னளந்துவளர் பண்கொண்ட பெண்பிள்ளை
தருகதிரு வாய்முத்தமே.

"கவளமத யானையுரி போர்த்தமுக் கட்பிரான்
கயிலையங் கிரிநிகர்ப்பக்
கதிதரு சிவாலயம் அநேகமறை யவர்குழாங்
கணக்கினி லடங்காது நூல்
துவளுமிடை மாதர்தங் கற்பினுக் குவமையோ
சொல்லரிய தியாகசாலை
சூழுநித்தி யாக்கினி வளர்ந்தேறும் வானம்
சுரந்துமழை பொழியும்விரைசூழ்
குவளையந் தாரணியும் வேளாளர் வாய்மையில்
குன்றார்கள் நவதானியம்
கொழிக்குமனு வேந்தர்செங் கோலோங்கும் வாழும்
குபேரனள காபுரியெனத்
தவளவொளி மாடநிறை சோழவள நாட்டரசி
தருகதிரு வாய்முத்தமே
தண்பொன் னளந்துவளர் பண்கொண்ட பெண்பிள்ளை
தருகதிரு வாய்முத்தமே."

"மேகபட லங்கிழித் தமுத கிரணமெழு
வெண்மதியி னுடலுரிஞ்சி
விரைகமழு நறுமலர்த் தாமநாற் றித்தென்றல்
வீசுசா ளரம்விளங்க
மாகமீ மிசையோங்கு மகமேரு வெனநின்ற
மாடமாளி கைகடோறு
வளர்தோகை மாமயில்க ளெனவந்த லார்கள்நட
மாடுமணி மறுகுமொருபால்
ஆகம புராணசாத் திரவிசா ரணைசெய்யும்
அன்பருறை மடமுமொருபால்
அன்னசா லையுமொருபால் வேத பாராயண
அருந்தவரிடங் களுமொருபால்
போகபூ மியினிலகு திருநாங்கை வாழ்செல்வி
பொன்னூச லாடியருளே

**பொன்னளந் திடுகருணை யின்னிளம் பிடிமன்னு**
**பொன்னூச லாடியருளே.''**

இந்நூல் வடசொற்கள் விரவிச் செம்பாகமாக அமைந் திருக்கிறது. தேவியின் திருநாமங்களை மிகுதியாகப் பொருத்தி ஆசிரியர் பாடுகிறுர். எளிய நடையில் பெரும்பாலும் ஆற்ருெழுக்கே அமைந்துள்ளது. எதுகை நயம் பொருந்திய பாடல்கள் சில உண்டு:—

"சங்காரி சிங்காரி" (11)
"குங்குமக் கொங்கையமுதுண்களி" (12)
"இந்தொளிர் எந்தையொர்" (19)
"பற்பதவி பெற்ருேர்" (37)
"பெருகி உருகவுளம்" (42)
"திகழ்தரப் புகழ்படைத்து" (35)
"அகில மகிழ்ந்திட" (39)
"கண்ட முனிவர் கண்முகிப்" (45)
"திகழ்தலாற் புகழ்தலாற்" (60)
"துரைப்பெண் வரைப்பெண்" (63)
"வெள்ளைமால் விடையேறு வள்ளல்பால்" (81)
"தேவர்பணி தேவர்சில" (99)

தேவியினுடைய ஸாந்நித்ய ரூபமான சம்பந்தம் இல்லை யென்ருல் வேதங்களால் துதிக்கப்படும் பரமசிவன் என்ற பிரம்மத்துக்கும் எந்த விதமான காரியத்தைச் செய்வதிலும் சாமர்த்தியம் ஏற்படுகிறதில்லை. பராசக்தியோடு பரமசிவன் கூடியிருக்கும் போது உலகத்தினது சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அநுக்ரஹம் என்ற ஐந்து விதமான கிரியைகளைச் செய்து தன்னிடத்துள்ள ஈசுரவத்துவம் என்ற தன்மையை அவர் வெளிப்படுத்திக் கொள்கிருர்.

இதனுல் தேவியானவள் பிரமன், விஷ்ணு, ருத்ரன், இந்திரன் முதலான தேவர்களாலேயும் பூஜிக்கத் தகுந்த தேவதையாக ஆகிருள். முற்பிறப்பில் அளவிட முடியாத தவத்தைச் செய்தவர்கள் தான் பராசக்தியான தேவியைக் காயிகபக்தியாகிற நமஸ்காரதிகளாலோ, வாசிக பக்தியாகிற தோத்திரங்களாலோ, மானஸிக பக்தியாகிய தியானுதி களாலோ ஆராதித்துப் பிறவிப் பயனை அடைவார்கள்.

"எல்லா அண்டங்களிலும் எல்லாச் சக்திகளுக்கும் காரண மாகவும், ஆதாரசக்தியாகவும் இருப்பது பராசக்தி". என்று கேனோபநிஷத்தில் மூன்றும் கண்டத்தில் சக்தியின் மகிமை கூறப்பட்டுள்ளது.

எல்லா வழிபாட்டிற்கும் ஆதாரமாக விளங்குவது சக்தி வழிபாடு. இதைச் சிவவாக்கியர் "சக்தியின் அருள் இல்லை யெனில் ஜகந்தனில் அசைவே இல்லை" என்கிறார். மனித சரீரத்தில் இரத்தமும் சதையும் போன்றவள் அம்பிகை. எலும்பு போன்றவர் சிவன்.

ரிக்வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் வருவது "தேவீ சூக்தம்." வேதம் அவளை 'வாக்' என்று கூறுகிறது. காண் பதுவும், கேட்பதுவும், மூச்சுவிடுவதும் எல்லாமே என் சக்தியால்தான் நிகழ்கிறது என்று பராசக்தியே கூறுகிறாள்.

சக்தியின் வழிபாட்டைச் சங்க நூல்களான பெரும் பாணாற்றுப்படை, பதிற்றுப்பத்து, குறுந்தொகை, அக நானூறு, சிலப்பதிகாரம் முதலிய நூல்கள் கூறுகின்றன.

தேவியின் பெயர்களில் 'உமா' என்பதுதான் தொன்மை யானது. தேவி சிறுவயதிலேயே தவம் செய்யச் சென்ற போது அவளது தாயாரான மேனகை 'உ' அடிபெண்ணே! 'மா' வேண்டாம் என்று தடுத்தாள். அதுமுதற் கொண்டு பார்வதிக்கு 'உமா' என்ற பெயர் ஏற்பட்டது என்று மகாகவி காளிதாசர் குமார சம்பவம் என்னும் நூலில் கூறுகின்றார்.

சிவபெருமானும் தேவியின் திருவடிகளில் விழுந்து வணங்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அவ்வமயம் தேவியின் திருவடிகள் சிவபெருமானின் தலைமீது பட்டு அந்தத் தலைக்கே அலங்காரமாகச் சூட்டும் மலராக அமைந் தன என்ற கருத்தை அபிராமபட்டர் கீழ்வரும் பாடலில் குறிப்பிடுகிறார்.

" ஆனந்த மாயென் னறிவாய் நிறைந்த வமுதமுமாய்
வானந்த மான வடிவுடை யாண்மறை நான்கினுக்கும்
தானந்த மான சரணார விந்தந் தவளநிறக்
கானந்த மாடரங் காமெம்பி ரான்முடிக் கண்ணியதே''.

இதே கருத்தைக் குமரகுருபரர்

"காப்பூர வல்லியின் பாதபத்ம மதுமத் தொடுந்தம் முடி வைத்த வாமது ரேசரவர்" (மதுமத்து-ஊமத்தை) என்று மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை என்னும் நூலில் கூறுகிறார்.

புண்ணிய தீர்த்த நீராடல், யாகதீக்ஷை, விரதானுஷ்டானம், வேதபாராயணம், பூப்பிரதக்ஷிணம் இவைகள் எல்லாவற்றையும் விட உடனே பலன்தரவல்லது தேவீயாகம், தேவீ மந்திர ஜபம், தேவீ பூஜனம், நாமஸ்மரணம், ஸ்தோத்திரம் வந்தனம் முதலியன.

இந்நூலில் உள்ள பாடல்களை நன்கு ஆராய்ந்து பார்க்கும் போது இந்நூலாசிரியர் தன்னை மறந்து ஆனந்தானுபவத்தை யடைந்து பாடியிருக்கிறார் என்று தெரிகிறது.

இந்நூலை தம்மைமறந்து படிப்போருக்கு மேற்சொன்னவை கரதலாமலகம் போல் நன்கு விளங்கும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நூலைப்படைத்தளித்த ஆசிரியரின் பெயரை நூலின் மூலமாகவும் அறிய முடியவில்லை.

நூல் நிலையத்தில் அச்சில் வராத நூல்கள் பல உள்ளன. அவற்றுள் ஒன்றான "சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ்" என்னும் இந்நூலைப் பதிப்பிக்க 1140 என்ற எண்ணுள்ள ஓர் ஓலைச்சுவடி மட்டுந்தான் உள்ளது. இந்தச் சுவடியும் கரையானுக்கு இரையாகியும் ஒடிந்தும் உள்ளது. 2, 90 இப பாடல்கள் உள்ள ஏடுகள் சிதிலமாகியுள்ளதால் சீர்கள் விடுபட்டுள்ளன. 1, 88, 89 பாடல்கள் உள்ள ஏடுகள் ஒடிந்து பாதி மட்டும் உள்ளதால் பாட்டின் முழுவடிவமும் தெளிவாக விளங்கவில்லை. இந்நூல் மேலும் சிதிலமாவதற்கு முன்பே நூலகத்தில் பணிபுரியும் திரு. சாயிராமன் பிரதி செய்தார்.

இந்நூலில் 99 பாடல்களே உள்ளன. செங்கீரைப்பருவம் ஒன்பது பாடல்களைக் கொண்டுள்ளது. ஐயரவர்கள் மாணாக்கரான திரு. வி. மு. சுப்பிரமணியஐயர் அவர்களால் திருத்தம் செய்யப் பெற்று இப்பொழுது பதிப்பிக்கலாயிற்று.

இம்முயற்சியில் புகுத்தி நடத்திப் பாதுகாத்தருளும் பராசக்தியின் திருவடித் தாமரைகளைச் சிந்தித்து வணங்குகின்றேன்.

" நாயகி நான்முகி நாரா யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கியென்
றாயகி யாதி யுடையாள் சரண மரணமக்கே".

சு. பாலசார நாதன்
டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

ஆராய்ச்சிக் குறிப்பு :

# வடமொழிச் சொற்கள்

அகிலம் (6), அஞ்சனம் (85) (92), அடவி (35) அண்டர் (29) அதரம் (6) அந்தரம் (65), அநேகம் (41), அரம்பை (80), அளகம் (3) அனுதிமுத்தன் (58), ஆரணம் (60), உத்தரபாகம் (52) கங்காசலம் (14) கண்டர் (50), கமடம் (81), கமலநயனி (2), கமலாசனம் (47), கிரி (3), சகோதரி (11), சடாடவி (41), சண்ட மாருதம் (3), சத்யலோகம் (30), சதுரர் (32), சதுரி (78), சந்ததம் (29), சர்வமங்களகரசுமங்கலி (11), சாகரம் (43), சிவானந்தம் (41), சின்மயி (79), சீதளம் (87), சீலம் (47), சுகிர்தி (2,59), சுதன் (32), சுந்தரம் (70,73,93) சுந்தரி (4,77,78), சுருதி (18), சூலி (11), சூனியம் (9), சொர்ணப்பிரதாம்பிகை (10), சோடசகலை (64), தந்திமுகன் (3), தரளம் (23), தராதலம் (11), தரு (14), தனு (58), தாபாக்கினி (3), தாரணி (60), துவாதசாந்தம் (4), தெரிசனம் (9), நயனம் (25), நவநிதி (2), நாசிகை (31), நாகாந்தம் (93), நிட்டை — நிஷ்டை (36), நித்திய நைமித்தியம் (48), நித்தியம் (18), நித்யாகினி (49), நியமம் (48), நிரந்தரி (78); நிரயசாகரம் (43), நிரயம் (43), நிருமலனே (2), பகிரண்டம் (4), பங்கயம் (13), பஞ்சாட்சரி (58), பராபரை (4), பரிபூரணி (28), புராதனி (11), புவனபோகம் (40) புவனம் (17), பூரணம் (58), பூரணி போகம் ம்ருகமதம் (2), மகிதலம் (79), மதுரம் (42,76), முகுந்தன் (39) யோகமார்க்கம் (47), ரக்தசாமுண்டி (9), வனவாசம் (26) வாரணம் வாலாம்பிகை வாவி (வாபி) (11), வேதநூபுரம் (5), வைகுண்டம் (30), ஐங்காரம் (11)

## பிறமொழிச் சொற்கள்.

சாலுவை, துரைச்சி

## அணிவகைகள் :—

அங்கம், அட்டிகை, கடகம், கணையாழி, சதங்கை, சந்திரப் பிறை, சரப்பளி, சூரியப்பிறை, சூழியம், செம்மணிக் கொலுசு, நாளவட்டம், நித்திலச்சுட்டி, பதக்கம், பொன்கொலுசு, மகர குண்டலம், முத்துச்சுட்டி, முதாரி, மேகலை.

# இதுவரை தெரியவந்துள்ள பெண்பாற் பிள்ளைத் தமிழ் நூல்களின் அகர வரிசைப் பட்டியல்.

| நூற்பெயர். | ஆசிரியர். |
|---|---|
| அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| அங்கையற்கண்ணம்மை பிள்ளைத்தமிழ் | அ. நரசிம்ம பாரதி |
| அபயாம்பிகை பிள்ளைத்தமிழ் | ... ... ... |
| அம்மை பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் | சிவஞான முனிவர் |
| அரியக்குடி அலர்மேலுமங்கை பிள்ளைத்தமிழ் | கிருஷ்ணமாச்சாரியார் |
| அவிநாசிப் பெருங்கருணையம்மை பிள்ளைத்தமிழ் | C. K. சுப்பிரமணிய முதலியார் |
| அழகாபுரி உமையம்மை ஆனந்தப் பிள்ளைத்தமிழ் | சிவசுப்பிரமணிய தேசிகர் |
| அழகிய மாமுலையம்மை பிள்ளைத்தமிழ் | காழி. ஞான தேசிகர் |
| அளகாபுரி உமையம்மை பிள்ளைத்தமிழ் | தியாகராச செட்டியார் |
| அளகை உமையம்மை பிள்ளைத்தமிழ் | அ. சண்முகஞ் செட்டியார் |
| அறம்வளர்த்த நாயகி பிள்ளைத்தமிழ் | தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் |
| ஆண்டாள் பிள்ளைத்தமிழ் | சவ்வாதுப் புலவர் |
| ஆதிபுரி வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ் | கனகசபைத் தம்பிரான் |
| இளமுலையம்மை பிள்ளைத்தமிழ் | பானுகவியடிகள் |
| உமையம்பிகை பிள்ளைத்தமிழ் | தியாகராச செட்டியார் |
| உறையூர் ஸ்ரீ காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் |
| உறையூர் நாச்சியார் பிள்ளைத்தமிழ் | கோவிந்த பிள்ளை |
| கண்டனூர் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் | சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் |
| கமலாலய அம்மன் பிள்ளைத்தமிழ் | வைத்தியநாத தேசிகர் |
| கன்னியாகுமரிப் பகவதியம்மன் பிள்ளைத்தமிழ் | நீ. கணபதி ஆசாரியார் |
| காஞ்சி காமாட்சியம்மை பிள்ளைத்தமிழ் | காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் |
| காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் | ... ... ... |

| | |
|---|---|
| குகையூர் பெரியநாயகி அம்மன் பிள்ளைத்தமிழ் | ஆனையம்பட்டி மகாவித்துவான் அப்பாவையர் |
| குலசை அறம்வளர்த்தநாயகி பிள்ளைத்தமிழ் | தெய்வசிகாமணிக் கவிராயர் |
| கொங்குக்குமரி பிள்ளைத்தமிழ் | செங்கைப் பொதுவன் |
| கோமதியம்மைபிள்ளைத்தமிழ் | முத்துவீரக் கவிராயர் |
| சிவகாமி பிள்ளைத்தமிழ் | சொக்கலிங்கம் செட்டியார் |
| சிவபுரம் மீனாம்பிகை பிள்ளைத்தமிழ் | பீமகவிப் புலவர் |
| சிவயோகநாயகி பிள்ளைத்தமிழ் (திருப்பெருந்துறை) | ... ... ... |
| சேதுபர்வதவர்த்தனியம்மை பிள்ளைத்தமிழ் | அருணாசலக் கவிராயர் |
| சேறைத்தவம் பெற்ற நாயகி பிள்ளைத்தமிழ் | மு. ரா. அருணாசலக் கவிராயர் |
| சௌந்தரியநாயகி பிள்ளைத்தமிழ் | வீரசுப்பைய சுவாமிகள் |
| திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ் | முத்துக்குமரன் |
| திருக்கோகர்ணம் பெரியநாயகி பிள்ளைத்தமிழ் | நா. கனகராஜய்யர் |
| திருச்சுழியல் துணைமாலையம்மை பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| திருத்தவத்துறைப் பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ் | வ. சு. செங்கல்வராயபிள்ளை |
| திருநெல்வேலி காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| திருப்பெருமணநல்லூர் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ் | அழகிய சொக்கநாதபிள்ளை |
| திருவதிகை வீரட்டானப் பெரியநாயகி பிள்ளைத்தமிழ் | சுப்பிரமணிய செட்டியார் |
| திருவருணை உண்ணாமுலையம்மை பிள்ளைத்தமிழ் | சோணாசல பாரதி |
| திருவீரை மரகதவல்லியம்மை பிள்ளைத்தமிழ் | பழனிப்பண்டாரம் |
| தில்லைச் சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ் | கிருட்டிண ஐயர் |
| நாகைப்பட்டினம் நீலாயதாட்சி பிள்ளைத்தமிழ் | கிருட்டிணசாமி உபாத்தியாயர் |
| நெல்லியோடையம்மன் பிள்ளைத்தமிழ் | வைத்தியநாதச் செட்டியார் |
| பச்சைநாயகியம்மன் பிள்ளைத்தமிழ் | முத்து நயினாத்தை முதலியார் |
| பரவைநாச்சியார் பிள்ளைத்தமிழ் | குருசாமி அடிகள் |
| பருவதவர்த்தனியம்மை பிள்ளைத்தமிழ் | மு. ரா. அருணாசலக் கவிராயர் |
| பவானி வேதநாயகி அம்மை பிள்ளைத்தமிழ் | மு. ரா. கந்தசாமிக் கவிராயர் |

| | |
|---|---|
| பாகம்பிரியா அம்மை பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| பாத்திம நாயகி பிள்ளைத்தமிழ் | செய்குமீரான் புலவர் |
| பிரமவித்தியா நாயகி பிள்ளைத்தமிழ் | மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| புதுவை திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ் | ... ... ... |
| பெரியநாயகி பிள்ளைத்தமிழ் | த. க. சுப்பராய செட்டியார் |
| பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ் | சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள் |
| பேரூர் பச்சைநாயகி பிள்ளைத்தமிழ் | கந்தசாமி அடிகள் |
| மங்கள நாயகி பிள்ளைத்தமிழ் | மு. சிவராம பிள்ளை |
| மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| மங்களேசுவரி பிள்ளைத்தமிழ் | ... ... ... |
| மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ் | நடேசக் கவுண்டர் |
| மயிலம்மை பிள்ளைத்தமிழ் | வைத்தியநாத தேசிகர் |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் | குமரகுருபர சுவாமிகள் |
| யோகநாயகியம்மன் பிள்ளைத்தமிழ் | ... ... ... |
| யௌவனாம்பிகை பிள்ளைத்தமிழ் | பலராமய்யா |
| வடதிருமுல்லைவாயில் கொடியிடையம்மை பிள்ளைத்தமிழ் | தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் |
| வடதிருமுல்லைவாயில் கொடியிடையம்மை பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ் | கனகசபைத் தம்பிரான் |
| வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ் | நடராசக் கவிராயர் |
| வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ் | வைரக்கண் வேலாயுதப் புலவர் |
| வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ் | தண்டபாணி சுவாமிகள் |
| வேதநாயகியம்மை பிள்ளைத்தமிழ் | மு. ரா. கந்தசாமிக் கவிராயர் |
| ஸ்ரீவைஷ்ணவி பிள்ளைத்தமிழ் | சாதுராம் சுவாமிகள் |

## இதுவரை தெரியவந்துள்ள ஆண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களின் அகரவரிசைப் பட்டியல்.

| நூற்பெயர் | ஆசிரியர் |
|---|---|
| அப்பர் பிள்ளைத்தமிழ் | காரைக்குடி சொக்கலிங்கஞ் செட்டியார் |
| அருணாசல ஞானதேசிகர் பிள்ளைத்தமிழ் | சுப்பராய அடிகள் |
| அரும்பரத்தை வேத விநாயகர் பிள்ளைத்தமிழ் | ... ... ... |
| அழகர் பிள்ளைத்தமிழ் | கவிகுஞ்சரம் ஐயர் |
| அழகர் பிள்ளைத்தமிழ் | சங்கத்தார் |
| அழகர் பிள்ளைத்தமிழ் | சாமி கவிகாளருத்திரர் |
| அனுமார் பிள்ளைத்தமிழ் | அருணாசலக் கவிராயர் |
| ஆண்டவர் பிள்ளைத்தமிழ் | சவ்வாதுப் புலவர் |
| ஆண்டியப்பப்பிள்ளைத் தமிழ் | முகவூர் மீனாட்சிசுந்தரக் கவிராயர் |
| ஆய்க்குடி முருகர் பிள்ளைத்தமிழ் | சிவராமலிங்கம் பிள்ளை |
| ஆயலூர் முருகர் பிள்ளைத்தமிழ் | தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் |
| ஆறுமுக நயினார் பிள்ளைத்தமிழ் | ச. சண்முகதாசப் பிள்ளை |
| இராகவர் பிள்ளைத்தமிழ் | குற்றாலக் குழந்தை முதலியார் |
| இராமலிங்க அடிகள் பிள்ளைத்தமிழ் | பொ. சுந்தரம் பிள்ளை |
| இராமானந்தர் பிள்ளைத்தமிழ் | கந்தசாமி அடிகள் |
| இலஞ்சிவேலவன் பிள்ளைத்தமிழ் | கவிராச பண்டாரம் |
| ஏசுநாதர் பிள்ளைத்தமிழ் | கி. சாமிநாதப்பிள்ளை |
| கடம்பர் கோயில் பிள்ளைத்தமிழ் | வீரசைவக் கனகசபைக் கவிராயர் |
| கதிரைமலைக்கந்தன் பிள்ளைத் தமிழ் | க. சிதம்பர நாதன் |
| கம்பன்பிள்ளைத்தமிழ் | பண்டித அசலாம்பிகை |
| கலைசைச்செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் | சிவஞான முனிவர் |
| கழனிவாசல் திருவருணாசல தேசிகரெத்தினப்பிள்ளைத் தமிழ் | சிவசுப்பிரமணிய தேசிகர் |
| கழுகுமலைப் பிள்ளைத்தமிழ் | காளிச் சுவாமிகள் |
| காங்கேயன் பிள்ளைத்தமிழ் | கொடிக்கொண்டான் பெரியன் அதிச்சதேவன் |
| காந்தியடிகள் பிள்ளைத்தமிழ் | நாமக்கல் கவிஞர் |
| கிறித்துநாதர் பிள்ளைத்தமிழ் | பிரான்சிசு பிள்ளை |
| குமரமலைப் பிள்ளைத்தமிழ் | மு. வீரபத்திரக்கவிராயர் |
| குருந்தமலை முருகர் பிள்ளைத் தமிழ் | கந்தசாமி அடிகள் |

| | |
|---|---|
| குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழ் | ஒட்டக்கூத்தர் |
| குன்றை முருகன் பிள்ளைத்தமிழ் | மழவராயனேந்தல் சுப்பிரமணிய பாரதியார் |
| கோட்டிமாதவன் பிள்ளைத்தமிழ் | பீமகவிப் புலவர் |
| கோயிலூர்ப்பிள்ளைத்தமிழ் | சுப்பிரமணிய ஐயர் |
| சங்கரகுமாரர் பிள்ளைத்தமிழ் | பொன்னுயிரங்கவிராய மூர்த்திகள் |
| சச்சிதானந்த விநாயகர் பிள்ளைத்தமிழ் | சங்கரகுமார முனிவர் |
| சிவஞான பாலைய சுவாமிகள் பிள்ளைத்தமிழ் | சிவப்பிரகாச சுவாமிகள் |
| சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத்தமிழ் | படிக்காசுப் புலவர் |
| சீரங்கநாதர் பிள்ளைத்தமிழ் | கோவிந்தப்பிள்ளை |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் பிள்ளைத்தமிழ் | வேலுத் தேசிகர் |
| சுப்பிரமணியக்கடவுள் க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ் | காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் |
| செந்நெற்குடிச் சண்முகநாதன் பிள்ளைத்தமிழ் | பீமகவிப் புலவர் |
| செப்பறைப் பிள்ளைத்தமிழ் | சுப்பிரமணியக் கவிராயர் |
| செழியதரையன் பிள்ளைத்தமிழ் | அந்தகக்கவி வீரராகவ முதலியார் |
| சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ் | கச்சியப்ப முனிவர் |
| சேக்கிழார் பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் | அந்தகக்கவி வீரராகவ முதலியார் |
| சொருபானந்தர் பிள்ளைத்தமிழ் | தத்துவராயர் |
| தணிகைப் பிள்ளைத்தமிழ் | கந்தப்பையர் |
| திருக்குற்றாலப் பிள்ளைத்தமிழ் | திரிகூடராசப்பக் கவிராயர் |
| திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் | பகழிக்கூத்தர் |
| திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ் | மாசிலாமணி தேசிகர் |
| திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ் | ... ... ... |
| திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ் | கந்தப்பையர் |
| திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ் | அப்பாவையர் |
| திருப்பரங்கிரிப் பிள்ளைத்தமிழ் | அருணாசலக் கவிராயர் |
| திருப்பெரும்பேற்று முருகர் பிள்ளைத்தமிழ் | ப. சிங்கார வேலு முதலியார் |
| திருப்பேரூர்முருகர்பிள்ளைத்தமிழ் | பேரூர் சிதம்பர சுவாமிகள் |
| திருமயிலைச் சிங்காரவேலர் பிள்ளைத்தமிழ் | தாண்டவராய முனிவர் |
| திருமாலிருஞ்சோலைப் பிள்ளைத்தமிழ் | நெற்குப்பை வைரவய்யர் |

| | |
|---|---|
| திருவருணாசல தேசிகர் பிள்ளைத் தமிழ் | சிவ சுப்பிரமணிய செட்டியார் |
| திருவனந்தை சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ் | வஹ்னியப்பபாவலர் |
| திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| திருவிடைக்கழி முருகன் பிள்ளைத் தமிழ் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் | மார்க்க சகாயர் |
| திருவிலஞ்சி முருகன் பிள்ளைத் தமிழ் | கவிராச பண்டாரம் |
| தேசியவிநாயகர் பிள்ளைத்தமிழ் | கணபதி ஆச்சாரி |
| தேவைப் பிள்ளைத்தமிழ் | அட்டாவதானம் சுப்பிரமணிய ஐயர் |
| நத்ஹறூராலி ஆண்டவர் பிள்ளைத்தமிழ் | பிச்சை இபுராகிம் புலவர் |
| நபிகள் நாயகம் பிள்ளைத்தமிழ் | செய்குமீரான் புலவர் |
| நாகூர் ஆண்டவர் பிள்ளைத்தமிழ் | சேகுமதாறு சாகிப்புலவர் |
| பத்திராசலம் பிள்ளைத்தமிழ் | கந்தசாமி அடிகள் |
| பத்மநாபர் பிள்ளைத்தமிழ் | சங்கரசுப்பிரமணியக் கவிராயர் |
| பழனிப் பிள்ளைத்தமிழ் | சின்னப்ப நாயகர் |
| புதுவை முருகன் பிள்ளைத்தமிழ் | தண்டபாணி சுவாமிகள் |
| பூவை மாநகர்க்குமரன் பிள்ளைத்தமிழ் | சிவ சுப்பிரமணியச் செட்டியார் |
| பெரியாழ்வார் பிள்ளைத்தமிழ் | தனபாலு பதுமாவதி அம்மையார் |
| மகரநெடுங்குழைக்காதர் பிள்ளைத்தமிழ் | திருமேனிக்கவிராயரின் சீடர் |
| மருதாசல முருகன் பிள்ளைத்தமிழ் | வ. மு. அருணாசலக் கவிராயர் |
| மறைமலையடிகளார் பிள்ளைத்தமிழ் | புதுவைக்கவிஞர் அரங்கசாமி |
| மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ் | காரைக்குடி சொக்கலிங்க ஐயா |
| மாதவச்சிவஞான சுவாமிகள் பிள்ளைத்தமிழ் | ... ... ... |
| முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் | குமரகுருபர சுவாமிகள் |
| வள்ளுவர் பிள்ளைத்தமிழ் | அமுத பாணியார் |
| வீரை நவநீதகிருட்டிணன் பிள்ளைத்தமிழ் | அண்ணாமலை ரெட்டியார் |
| வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ் | வரதராசப் பிள்ளை. |

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ii | 9 | பதிப்பித் | பதிப்புத் |
| iii | 18 | நன்றியதைத் | நன்றியைத் |
| v | 10 | நவம்பல | நலம்பல |
| xvii | 19 | முத்துப் | முத்தப் |
| xix | 26 | உருபல்பஃறேர் | உருவப்பஃறேர் |
| xix | 30 | என்று | என்றும் |
| xx | 29 | கார்த்தியாயனர் | காத்தியாயனர் |
| xxii | 29 | நாகூர் | நாங்கூர் |
| xxiii | 2 | பாசவனப் | பராசவனப் |
| xxvi | 28 | ஔவந்த | ஔவந்ந |
| xxvii | 15 | கண்முகிப் | கண்முகிழ் |
| 6 | 3 | தேவிபயப் | தேவியைப்பற்றிய |
| 7 | 18 | புரககவே | புரக்கவே |
| 15 | 18 | சோலையந் | சோலையுந் |
| 16 | 13 | கயல | கயல் |
| 24 | 14 | இதயத | இதயத் |
| 27 | 12 | முநதியந் | முந்தியந் |
| 28 | 6 | அமுதமு | அமுதமு |
| 65 | 31 | சுரும்பின | சுரும்பின் |
| 66 | 23 | பொட்டிட் | பொட்டிட்ட |
| 67 | 14 | ஆண்ட | அண்ட |
| 71 | 24 | டிளஞ்சினவரால | டிளஞ்சினவரால் |
| 72 | 20 | அகத்தியயன் மீண் | அகத்தியன் மீண் |
| 73 | 14 | கண்டிரன் | கண்டிரண் |
| 76 | 16 | ஆதிசி | அதிசி |
| 76 | 18 | பத்தகை | பதுக்கை தனைப் |
| 81 | 6 | பென்னூச | பொன்னூச |
| 81 | 24 | பனைதொறுந் | பனைதொறுந் |

# சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத் தமிழ்

## 1. காப்புப் பருவம்

### திருமால்

1. சீர்கொண்ட செம்பவள வல்லிபொற் கொடியெனச்
செவ்வி வாய்த்துத்தழை
................................ன
றிகழ்கயிலை யம்பொருப்பின்

ஏர்கொண்ட மாணிக்க மிளவெயி லெறித்தருள்
புரிந்திடும் சொருணபுரி வல்லியெனும்
எழின மயிலை யினிதுகாக்க
............................லைகமழ
தண்ணறுந் தேன் துளிப்பத் தவழும்வெண்
ணிலவுபொழி
சுரிமுக........................
நீலநெடுமால் வரைநிகர்ப்பக் கவைத்தெழில்
கனிநத்துத்
திகழுவளர் பசுங்கொண்டலே. (1)

### குறிப்புரை

(அடி-1) சீர்-புகழ், செம்பளவல்லி-மிகவும் சிவந்த பவழக்கொடி போன்றவள் செவ்வி - சமயம், பொருப்பு – மலை.

(அடி-2) ஏர் - அழகு. நிகர்ப்ப - ஒத்திருக்க.

(அடி-3) சுரிமுகம் - சங்கு. கொண்டல் - மேகம்.

(அடி-4) பசுங்கொண்டல் - மிகப்பசிய மேகம் போன்ற திருமால்.

குறிப்பு : இச்செய்யுள் உள்ள ஓலை ஒடிந்து பாதி மட்டும் உள்ளதால் செய்யுளின் முழு உருவமும் அறிய முடியவில்லை.

## வகுப்பு

2. முளரி மலருறை பிரம னெநச.........முணர்
நவநிதியை யருமறை முதலை முறைதெரி
வள்ளலைத் தொ...ண் ணிலவொளி
மொய்சடைக் காட்டனை முதிரு நரையுட
றிரைய வருன........னை

அளவி லமரர்கள் குறைவை சிறைவிட
அடரு மயிலணி கையன்முற் கார்த்திகை
அதனின் மதுமலர் நறியப......லுடன்
அமைய வழிபடு துய்யபொற் ருட்டுணை
அமைதி பெறநினை பவர்கள் மனைதொறும்
அதிர வருமொரு வெள்ளத் தீர்த்தனை
அருமை திகழ்திரு மலனை யளவிட
அரிய பெரியபொன் னய்யனைப் போற்றுதும்

களப ம்ருகமத மிலகி யொழுகிய
கரிய குழன்மிசை செம்மலர்ச் சூட்டணி
கவினும் வழுதிகண் மணியை யியல்பெறு
கவுரி யினைநிறை பொய்கையிற் ருேற்றிய
கமல நயனியை இனிய சுவைதரு
கனியை யமுதினை யேய்தனப் பேட்டைவை
கறையின் மறையவர் துதிசெய் கிளியைமெய்
கலுழும் எழில்கொழி மெல்லியைக் கூர்த்திடு
துளைவெள் ளெயிறில கியன......வுறுசுவை
மன்னுல குயிரை நையமுற ருெக்கியே
தொடரு மலவலி யகல வுயர்பர
சுகநன் னெறிதரு தையலை முற்றரு
சுகிர்தி யினையிள மயிலை யளிமுர
ருெடையல் புனைமிகு செல்வியைச் சீர்த்தகு
தொகையில் மகிமைகொள் கருணை பெருகிய
சொருண புரியெனும் வல்லியைக் காக்கவே. (2)

(அடி-1) முளரிமலர் - தாமரைமலர். நவநிதி - ஒன்பது செல்வங்கள். அவை : பதுமம், மாபதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், நந்தம், நீலம், கர்வம். "பின்கலன்று னருள்பெருக நவநிதியும்" (சேது. துராசா. 20) அயில் - வேல்.

(அடி-2) பொன் + தாள் + துணை. மனைதொறும் - வீடுகள் தோறும். அதிர - சப்திக்க. நிருமலன் - குற்றமற்றவன்.

(அடி-3) ம்ருகமதம் - கஸ்தூரி. கரியகுழல்-கருமையான கூந்தல். வழுதி - மலையத்துவச பாண்டியன். கவுரி - கௌரி, வைகறை-விடியற்காலை.

(அடி-4) அளி - வண்டு. தொடையல் - மாலை,

குறிப்பு : இச்செய்யுள் உள்ள ஓலை ஒடிந்து பாதி மட்டும் உள்ளதால் செய்யுளின் உண்மைஉருவம் நன்கு தெரியவில்லை.

## விநாயகர்

3. அண்டகோளகைநடு நடுங்கவட வரைகுலைந்
தசைய வெண் குலகிரிவெடித்
தனற்பொறி பறக்கக் கறைச்சூட்டு மோரட்டரவின்
ஆயிரந் தலைதுடிப்பச்

சண்டமா ருதமெனச் சீறிவரு கயமுகன்
தன்னுடல் கிழித்தெறிந்த
தறுகண்மைச் சிறுகவுட் டழைசெவிப் புகர்முகத்
தந்திமுக னைத்துதிப்பாம்

மண்டுதா பாக்கினியின் வாடித் தவிக்கின்ற
வான்பயி ரினுக்கிரங்கி
மழைபொழிந் திடுவதென மன்னுயிர் கமக்கெலாம்
வறுமை விட விருநாழிநெற் .

கொண்டுவளர் முப்பத்தி ரண்டறம் வளர்க்கும்பூங்
கொம்பைமா ணிக்க மணியைக்
குலவுபெண் ணமுதையொளிர் சொர்ணபுரி வல்லியைக்
குடிகொண்டு காக்க வென்றே. (3)

(அடி-1) அண்டகோளகை - அண்டமாகிய உருண்டை. ''அண்டகோளகையெலாம். (திருஉத்தரகோச மங்கை மங்களேசுவரி பிள்ளைத் தமிழ் செய். 1) வடவரை - மேருமலை.

(அடி-2) சண்டமாருதம் - பெருங்காற்று. கயமுகன் - கஜமுகாசுரன். அசுரேந்திரன் என்னும் அரசன் தேவரை வருத்த ஒரு வலிமையுள்ளவன் வேண்டும் என்று சுக்கிராசாரியரைக் கேட்டான். அவர் அசுரேந்திரனிடம் முனிவர் மரபில் மரகத முனிவர் என்பவர் தவம்புரிகின்றார். அம்முனிவரை உம்மரபில் ஒரு பெண் சேரின் அவ்விருவருக்கும் தோன்றும் புதல்வன் மிகுந்த வலிமையுடையவன் ஆவான் என்றார். அதைக் கேட்ட அரசன் விபுதை என்பவளை அனுப்ப அவள் சென்று அவர் தவத்திற்கு அஞ்சி அவருக்கருகில் அம்முனிவர் தனக்குக் கணவராக வேண்டும் எனத்தவஞ் செய்தாள். இருவருக்கும் தவம் கைகூடும் காலமாதலின் முனிவர் விழித்துத் தமக்குமுன் இரண்டு யானைகள் கலவி செய்யக் கண்டு காமக்குறிப்புடன் நின்றனர். இதனை அருகில் தவம் செய்து கொண்டிருந்த, விபுதை கண்டு எதிர்வர முனிவர் இவளைப் பெண் யானையாக்கித் தாம் ஆண் யானையாகிப் புணர்ந்தார். உடனே யானைமுகத்துடன் கஜமுகாசுரன் தோன்றினன். பின்பு இவன் சிவனைக் குறித்துத் தவஞ்செய்து வரங்கள் பல பெற்று அரசாண்டு தேவர்களைத் துன்புறுத்திக் கஜமுகராகிய விநாயகரால் கொல்லப்பட்டுப் பெருச்சாளியாய் விநாயகருக்கு வாகனமாயினன்.

இவன் ஆண்ட நகரம் மதங்கபுரம். தறுகண்மை - அஞ்சாமை. தந்திமுகன்- விநாயகக் கடவுள்.

(அடி-3) தாபாக்கினி - சூரிய வெப்பம்.

(அடி-4) முப்பத்திரண்டு அறம் வளர்க்கும் - முப்பத்திரண்டு தருமங்களைச்செய்யும். 'இடப்பான்முப்பத்திரண்டறம் வளர்ப்ப'' (திருவாரூர் நான். 9—9.) ''அறமிரண்டெட்டெட்டெட்டும் வளர்க்கும்'' (திருப்புகழ்.) முப்பத்திரண்டு அறங்களாவன :— ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்கு உணவு, அறுசமயத்தார்க்கு உண்டி, பசுவிற்கு வாயுறை. சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச் சோறு, (அநாதர்க்கு அளிக்கும் உணவு), மகப்பெறுவித்தல், மகவளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடுதல், அறவைத் தூரியம், (அநாதைகளுக்கு அளிக்கும் உடை), சுண்ணம், நோய்க்கு மருந்து.

வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கு எண்ணெய், பெண்போகம், பிறர் துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்கு உணவு, ஏறு விடுத்தல், விலைகொடுத்து உயிர்காத்தல், கன்னிகா தானம்.

## முருகன்

4. எண்டிசை திடுக்கிட இடிக்குரல் எழுப்பவிழி
எரிகதுவ வேயிரிறு(பு)
இமையவர்கள் வேந்தனைச் சீறியெழு சூரனுடல்
இருகூற தாய்ப்பிளந்து
திண்டிறல் கொண்ட பகிரண்ட மூதண்டம்
சென்ருரு கணத்தின் மீளும்
சித்திரக் கலாபமயில் வெற்றிவேல் முருகனிரு
செஞ்சரணம் அஞ்சலிசெய்வாம்
தொண்டர்கலி தீர்த்திடு துரைச்சியைக் கல்யாண
சுந்தரி யமுதைமதுரச்
சுவைகனிந் தொழுகும் பசுந்தேனை யெண்ணரிய
துவாதசாந் தத்தின்மேலாய்
மண்டுமொளி மயமாய் நிறைந்திடு பராபரையை
மன் னுபே ரின்பவெள்ள
மடைதிறந் தென்னமிகு கருணைபொழி சொர்ணபுரி
வல்லியைக் காக்கவென்றே. (4)

(அடி-1) எண்டிசை - எட்டு + திசை. இடிக்குரல் - இடி ஓசை போன்ற குரல். விழி எரி கதுவ - கண்கள் அனலைக் கக்க. இமையவர்கள் வேந்தன் - இந்திரன். சூரன் - சூரபத்மன்.

(அடி-2) பகிரண்டம் - வெளியண்டம். "மல்லாண்ட தடக்கை யாற்பகிரண்ட மகப்படுத்த காலத்து" (திவ், பெரிய திரு. 11, 6. 2) மூதண்டம் - பிரமாண்டம். "மூதண்ட வேதண்ட கோதண்ட" (மீ. பி. த. சப். 1,) செஞ் சரணம் - செம்மை + சரணம் பண்புத்தொகை.

(அடி-3) துவாதசாந்தம் - உச்சிக்குமேல் பன்னிரண்டு அங்கு லத்தில் உள்ளதாகக் கருதப்படும் யோகஸ்தானம்,

துவாத சாந்தத்திலுள்ள சதாசிவ மூர்த்தியின் இடத்துடையில் அம்பிகை வீற்றிருப்பதாகத் தேவியயம் நூல்கள் கூறும் என்பர்.

"துவாத சாந்தத் தலமும்" (மீ. பி த அம்புலி. 6.)

(அடி-4) பராபரை - சிவசத்தி, மன்னு - நிலைபெற்ற.

## பிரமன்

5. நரைத்தகுடுமித்தலை தளர்ந்தநடை மூப்பினால்
நழுவியிடு முடைதயங்கும்
நான்மறைக் கிழவனைப் பழமறைப் பொருளோதி
நாத்தழும்புறு ஞானியை
உரைத்தசெம் பொன்போல் இலங்கியிடு மேனிமேல்
உரியமுப் புரிநூலசைந்
தொளிசெய்ய வுலகம் படைத்தபெரி யோனைநெஞ்
சுருகவாழ்த்தித் துதிப்பாம்
விரைக்கமல மலர்போல் விளங்கியிடு திருமுகமும்
வெண்ணிலவு பொழிமுறுவலும்
வேதநூ புரமிலகு பாததா மரையுமென்
விழியில கலாதிருக்கும்
வரைக்கரசு பெற்றிடு துரைச்சியைத் திருநாங்கை
மாநகரம் வாழவந்த
வாலாம் பிகைக்குயிலை மேலான சொர்ணபுரி
வல்லியைக் காக்கவென்றே. (5)

(அடி-1) நான்மறைக்கிழவன் - பிரமன். பழமறைப்பொருள் - வேதப் பொருள்.

(அடி-2) முப்புரிநூல் - பூணூல். உலகம் படைத்த பெரியோன் - பிரமன்.

(அடி-3) விரை - வாசனை. முறுவல் - புன்சிரிப்பு, இலகும் விளங்கும். பாத தாமரை - உருவகம்.

(அடி-4) வாலாம்பிகை - பாலாம்பிகை. குயில்: ஆகுபெயர். வாலாம்பிகைக் குயிலை, சொர்ணபுரி வல்லியைக் காக்க என்று உலகம் படைத்த பெரியோனை வாழ்த்தித் துதிப்பாம்.

## திருமகள்

6\. மருமிக்க பற்பநன் மலரிற் றுளித்திடு
மதுவைக் களித்துண வலமுற் றிகழ்க்கத
வதனுட் புறத்துமெல் லிசையைப் பரப்பிவிண்
வழியிற் றனித்தனி வரமொய்த் தளிக்குலம்

உருகிச் சிவப்புறு மதரத் தியைப்பணி
முகைமுத் தினைப்பொரு நகைசற் றுதித்திட
முகமற் புதத்தனி யெழிலைக் கொழிக்கவம்
முளரிப் பொகுட்டுறை திருவைத் துதிக்குதும்

இருமைக்கு நற்கதி தருசக்தி யுத்தமி
இதயத் திருத்துவர் வினையைத் துரத்துவள்
இமையப பொருப்பிறை மகள்முக் குணத்தினில்
எழுமுத் திறத்தின ரினைமுற் படைத்தவள

சுருதித் தனிப்பொருள் அகிலத் தினிற்குறு
துணைப்பற்று விட்டவா மனத்துக கினித்தவள்
தொகையிட் டளப்பறு கருணைப பெருக்கெழு
சொர்ணத் துரைச்சியை யினிதிற் புரககவே. (6)

6\. (அடி-1) பற்பநன்மலர் - தாமரைமலர். மது—தேன். அளிக்குலம் - வண்டின் கூட்டம்.

(அடி-2) அதரம் - உதடு. முளரி - தாமரை.

(அடி-3) நற்கதி - துறக்கம் முதலிய நற்பதவி. இதயம் - மனத்தில். பொருப்பு - மலை. முக்குணம் - சத்துவ குணம், ரசோகுணம், தமோகுணம்.

(அடி-4) சுருதி - வேதம். அகிலம் - உலகம் புரக்க - காக்க.

முடிபு : சொர்ணத் துரைச்சியைக் காக்க என்று திருமகளைத் துதிப்பாம்.

## கலைமகள்

7\. மிடறுடைத் தின்னிசை கனிந்துவரி யளிபாடி
விண்ணெனன் றாதியாட
வெண்ணிலாத் தவழநறுந் தண்ணமுத கிரணம்
விரிந்திட வடர்ந்துநீண்ட

மடல்முறுக் கவிழமது வொழுகிவிரை கமழ்வெள்ளை
வள்ளவாய்க் கமலமலர்மேல்
மகிழ்கூர்ந் திருந்த கலைமாது தளிரிணையடி
வணங்கிநின் றஞ்சலிசெய்வாம்
கடல்மடை திறந்ததெனக் கருணைபொழி விழிதிகழ்
கருங்குயிலை மதுரமொழுகுங்
கனியிளங் குதலைமொழி யிளவனப் பேட்டினைக்
கற்பகப் பூங்கொம்பைநற்
குடிலையு முளைத்திலகு செங்கரும் பைப்புவன
கோடிகளை யீன்றசொர்ணக்
குழந்தையைச் சீராட்டி யாராத காதலொடு
குடிகொண்டு காக்கவென்றே. (7)

(அடி-1) மிடறு - கழுத்து. அளி – வண்டு. தண் - குளிர்ச்சி.

(அடி-2) மடல் - பூவிதழ். முறுக்கு - இதழ்களின் பிணிப்பு. மது - தேன். கலைமாது - சரசுவதி. தளிர் இணையடி - தளிர்போன்ற இரு பாதங்களை.

(அடி-3) குதலைமொழி—எழுத்து வடிவம் பெறாத சொல்.

(அடி-4) குடிலை - சுத்தமாயை, புவனம் - உலகம். ஆராத— ஓரளவில் அமையாத. காதல் - அன்பு.

முடிபு : சொர்ணக் குழந்தையைக் காக்க என்று கலைமகளை அஞ்சலி செய்வாம்.

## சத்த மாதாகள்

8. பிறைவென்ற சிறுநுதலும் கள்ளிருள் குடிகொண்ட
பின்னற் கருங்கூந்தலும்
பிள்ளைமான் விழியும் இளவள்ளை வார்காதும்
பிறங்கு மகரக்குழைதிகழ்ந்
தறைகின்ற பச்சிளங் கழைபொருவு தோளிணையும்
ஆய்ந்தெழில் கொழிப்பவாய்நத
அன்னமென வொளிர்கின்ற கன்னியர்க ளெழுவர்சீ
றடிபணிந் தஞ்சலிசெய்வாம்
திறல்கொண்ட பாண்டியன் செல்வக் குமாரியாய்த்
தென்மதுரை நகர்புரந்து
செங்கோல் செலுத்து கொடிஞ்சியந் தேர்கடிது
செல்லவால வளையொலிப்ப

விறல்கொண்டு வாழ்திங்கு விசயஞ்செய் திடுசூலி
வில்லியபி டேகவல்லி
விளைகரும் படுசொல்லி சொர்ணபுரி வல்லியெனு
மெல்லியைக் காக்கவென்றே. (8)

(அடி-1) நுதல் - நெற்றி. பிறங்கு - விளங்குகின்ற. பச்சிளங் கழை - பசுமையான இளைய மூங்கில்.

(அடி-2) கன்னியர்கள் எழுவர் - பிராமி, மகேசுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி.

பிராமி:- நான்கு கை, விசாலாக்ஷம், ஒளிரும் பொன்மேனி, வரதம், அபயம், கமண்டலம், அக்ஷமாலிகை, ஹம்சத்வஜம், ஜடாமகுடம், பத்மாஸனம் உள்ள வளாய் அன்னவாகனம் ஊர்ந்து இருப்பவளாய்ப் பிரம்ம ரூபிணியாயிருப்பவள்.

மகேசுவரி:- வெள்ளை நிறம், திரிநேத்ரம், சூலம், அபயம், வரதம், அக்ஷமாலை, விருஷ த்வஜம், ஜடாமகுடம், உரகபூஷணமுள்ளவளாய் விருஷபவாகனா ரூடையாய் மகேசரூபிணியாயிருப்பவள்.

கௌமாரி:- கௌமார உருவத்தைக் கொண்ட கன்னிகை யாய் இரத்னமகுடம் அணிந்தவளாய், அங்குசம், வேல், அபயம், வரதம். செம்பட்டாடை, ஆரகேயூரபூஷணம், குங்கும நிறங்கொண்டு மகாவீரியம் மயில் துவசம் உள்ளவளாய் மயில் வாகனம் ஊர்ந்திருப்பவள்.

நாராயணி:- பத்ம பத்ர விசாலாட்சியாய், சியாமள வர்ண முள்ளவளாய், மகாபலம் கொண்டவளாய்ச் சங்கு, சக்ரம், அபயம், வரதமாகிய நான்கு கைகளைக் கொண்டவளாய்க் கருடத் துவசம் கொண்டு கருடவாகனம் ஊர்ந்திருபபவள்.

வராகி:- இவள் கறுப்புப் பட்டாடை யுடையவளாய், வராகமுகம், சர்வசம்பத்கரியாய், பவித்ராலங் கிருதமான மார்பினையுடையவளாய், பாதங்களில் நூபுரமணிந்தவளாய்க் கலப்பை, முசலம் (உலக்கை,) வரதம், அபயம் கொண்டு கறுப்பு அணி அணிந் திருப்பவள்.

இந்திராணி:- வஜ்ரபாணியாய், இரண்டு கண்கள் அழகுள்ள வஸ்திர மணிந்தவளாய், வரதம், அபயம், சக்தி கொண்டு கஜத்வஜமுள்ளவளாய் யானைவாகனம் ஊர்ந்திருப்பவள்.

காளி:- இவள் திரிநேத்ரம், சூலம், கட்கம், அம்பு, சக்ரம், ஒருபுறக்கரங்களிலும் பாசம்,பலகை,சார்ங்கம் சங்கம் மற்றக் கரங்களிலும் கொண்டு அஷ்டபுஜம் உள்ளவளாய்ச் சடாமகுடம், சர்வாலங்கார முடையவளாய் மகிஷ வாகனம் ஊர்ந்திருப்பவள்.

(அடி-3) பாண்டியன் செல்வக்குமாரி - மலயத்துவச பாண்டியன் மகளான தடாதகைப்பிராட்டி.
மலையத்துவச பாண்டியன் புத்திரன்வேண்டி அசுவ மேத யாகம் பல செய்தான். இந்திரன் தோன்றிப் புத்திரகாமேஷ்டி யாகம் செய்யக் கட்டளை யிட்டனன். அவன் அவ்வாறே செய்கையில் யாகத்தில் பார்வதி தேவியார் மூன்று முலைகளை யுடைய குழந்தையாய் அவதரித்தாள். அரசன் குமாரியின் உறுப்பின் மிகுதியைக் கண்டு கவலை யடைந்திருக்கையில் அசரீரி! 'இக்குழந்தைக்குக் கணவன் தோன்றுகையில் ஒரு முலை மறையும்' என்று சொல்லக் கேட்டு மகிழ்ச்சியடைந்தான். தடாதகைப் பிராட்டியார் சகலகலைகளும் கற்றுத் தந்தை முடிபுனைவிக்கப் புனைந்து செங்கோல் செலுத்தி உலகெல்லாம் வென்று பகைவரிடம் திறைகொண்டு கைலாயத்திற்குச் சென்று நந்தி முதலிய சிவகணத்தாருடன் போர் செய்து அவர்களைப் புறங்காட்டி ஓடச் செய்தனள். இதனால் சிவன் போருக்கு வர ஒரு முலை மறைந்தது கண்டு நாணிச் சோமசுந்தரராக எழுந்தருளிய சிவனை மணந்து குண்டோதரனுக்கு அன்னமிட்டு உக்கிர குமார பாண்டியனைப் பெற்று இறைவருடன் திருக்கோயிலில் எழுந்தருளினள்.

புரந்து - அரசாட்சி செய்து. கொடிஞ்சி - கைக்குதவி யாகத்தேர்த்தட்டின் முன்னே நடப்பட்டுத்தாமரைப் பூவடிவமுள்ள அலங்கார உறுப்பு. ''மணித்தேர் கொடிஞ்சி கையாற் பற்றி'' (மணி. 4, 48.) கடிது - விரைவாக. வால்வளை ஒலிப்ப - வெண்மையான சங்குகள் சப்திக்க.

(அடி-4) சூலி - சூலத்தையுடையவள். துர்க்கை. அபிடேக வல்லி - திருமுடியை உடையவள். ''அம்பொன்முடி முடிசூடு மபிடேக வல்லியொடும்'' (மதுரைக். செய். 2). விளைகரும்பு; வினைத்தொகை.

## திருநீறு

9. முரிதிரை சுருட்டிநிமிர் மகரம் புரட்டியெழு
முந்நீரின் உவரிசுற்று
மூதுலகில் வேதாள பூதமொடு ரத்தசா
முண்டிமுனி சண்டிவீரன்

திருகுதலை வலிசுரம் பில்லிசூ னியமெலாந்
தெரிசனஞ் செய்தவுடனே
திடுக்கிட்டு நெஞ்சந் துடித்தலறி யோடவொளிர்
தீருநீற்றை அஞ்சலிசெய்வாம்

மருவிரி சுகந்தாரணி திரிபுரை சவுந்தரியை
மதுரமிகு செஞ்சொலமுதை
மலையரையன் முன்புபுரி தவநிறைய வந்தருள்செய்
வடிவுள பசுங்கிளியைவான்

சொரிதுளி விரும்பிமகிழ் பயிரெனவே மன்னுயிர்த்
தொகுதிபடு துயரநீக்குஞ்
சொர்ணபுரி யம்பிகையி னுதல மிசை விளங்கியுறு
துணைசெய்து காக்கவென்றே. (9)

(அடி-1) திரை - அலை. முந்நீர் - கடல். ஆற்று நீர், ஊற்றுநீர், மழைநீர். ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற மூன்று தன்மைகளையுடையது எனினும் ஆம்.

(அடி-2) ரத்தசாமுண்டி - ரக்த பீஜன் என்ற அரக்கனுடைய ரத்தத்தை ஒரு துளியும் சிந்தாமல் பருகி அவனைக் கொன்றாள்.

(அடி-3) திரிபுரை மும்மூர்த்திகளுக்கும்மூத்தவள். (சீர்பாத வகுப்பு, 4)

(அடி. 4) மலையரையன் - இமவான். கிளி: உவம ஆகுபெயர். வான் - மேகம்.

(அடி-4) மன்னுயிர்த்தொகுதி - நிலைபெற்ற உயிர்த்தொகுதிகளின் கூட்டம். நுதல் மிசை - நெற்றியில். மிசை: ஏழாம் வேற்றுமையுருபு. "காப்பென்ப நீறும் தூசும் காவலும் கதவு மாமே" (அகராதி நிகண்டு:- ஒருசொல் பல்பெயர்த் தொகுதி)

## முப்பத்து முக்கோடி தேவர்

10. மிக்கவிரை மலர்சொரிந் திருகரம் எடுத்துச்சி
மீதுவைத் தஞ்சலிசெய்வாம்
வேதநா யகியைவளர் சொர்ணப்பிர தாம்பிகையை
மேலான தோகைமயிலை
புக்கமை யிருள்குடித் திலகொளி பரப்பியெழு
புரவிபூட் டிக்கவின்செய்
புனைமணித் தேரூர்ந்து வருமிரவி யும்பெருகு
புதுநிலவு பொழிமதியமும்
தக்கபதி னொருகோடி பெலவுருத் திரகணத்
தலைவரு மருத்துவரும்வேற்
சண்டகோ பனுநெடிய வயிரவர்க ளெண்மருஞ்
சாதவா கனனும்வெய்ய
திக்குநெடு நாகமும் நவகோடி சித்தருந்
திசைபால ரிருநால்வருந்
திகழ்முனிவ ரெழுவரு முப்பத்து முக்கோடி
தேவருங் காக்கவென்றே. (10)

(அடி-1) மிக்க விரைமலர் - மிகவும் நறுமணம் உள்ள மலர்களை இருகரம் - இரண்டு கைகளையும்.

(அடி-2) இருள் குடித்து - இருளைப் போக்கி. எழுபுரவி - ஏழுகுதிரைகள். சூரியன் தேர்க்குதிரைகள் ஏழு. அவை:- காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதி, பங்க்தி, த்ருஷ்டுப், ஜகதி என்ற ஏழு சந்தசுக்களுமே ஆகும். அக்குதிரைகளின் நிறம் பசுமை என்று புராணம் கூறும். கவின் - அழகு, இரவி - சூரியன். மதி - சந்திரன்.

(அடி-3) வயிரவர்கள் எண்மர் - தாருகனைக் கொன்ற சத்தியின் கோபத்தீ எழுந்து குழந்தை உருக் கொண்டு இருந்தது. அதனைக் காளி பாலூட்டி வளர்த்தனள். அதைச் சிவன் ஒடுக்க ஒடுங்கி அவரிடமிருந்து எட்டு உருக் கொண்டு வெளிப் பட்டனர் காலவயிரவர், அசிதாங்க வயிரவர், குரோதவயிரவர், கண்டவயிரவர், உன்மத்த வயிரவர், கபால வயிரவர், விபூஷண வயிரவர், மார்த்தாண்ட வயிரவர். ஒரு சிலர், சுதந்திர

வயிரவர், சுவேச்சாவயிரவர், உலோக வயிரவர், கால வயிரவர், உக்கிரவயிரவர், பிரச்சைய வயிரவர், நின்மாண வயிரவர் பூஷணவயிரவர் எனவும் கூறுவர்.

(அடி-4) திசைபாலர் இருநால்வர் : இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன். முப்பத்து முக்கோடி தேவர் - சூரியர் பன்னிருவர், வசுக்கள்எண்மர், உருத்திரர் பதினொருவர், அசுவினி தேவர் இருவர்.

## 2. செங்கீரைப் பருவம்

### ஆசிரிய விருத்தம்

11. பைங்காழைச் செழுங்கமுகின் மிடறிலகு நல்லிளம்
பாளைமணம் வீசவாழைப்
பழக்குலை கனிந்துசெந் தேன்மாரி பொழியப்
பலாவினீள் கனிவெடித்துக்

கொங்கார்ந்த பொற்சுளை கனிந்துநற வொழுகக்
குளிர்ந்தநிழல் வளர்சோலையுங்
கோகனக வாவியும் மேவுதிரு நாங்கைநகர்
குடிதழைய வந்தவாழ்வே

சங்காழி மாயன் சகோதரி புராதனி
தராதல மளித்தசூலி
சர்வமங் களகர சுமங்கலி சுகந்தநிற
தவளமா லிகையில்வண்டு

செங்கார மிடுமயிட சங்காரி சிங்காரி
செங்கீரை யாடியருளே
சிறகிலகு கிரணமயில் வருணமிகு சொர்ணபுரி
செங்கீரை யாடியருளே. (1)

(அடி-1) கமுகு – பாக்குமரம். மிடறு - கழுத்து. தேன்மாரி- தேன்மழை.

(அடி-2) கொங்கு - தேன். ஆர்ந்த - நிறைந்த, கோகனவாவி - தாமரை மலர் நிறைந்த குளம்.

(அடி-3) சங்காழி மாயன் சகோதரி - பார்வதி. புராதனி - எல்லோருக்கும் மூத்தது. உலகப் படைப்பில் முதலில் தோன்றிய சூட்சுமமான ஆகாயம். அதற்கும் மூத்தவை அகங்காரம், மஹத், அவியக்தம், மூலப்பிரகிருதி. இவை அனைத்தும் தேவியிடமிருந்து தோன்றியவை. அதனால் தேவி புராதனி என வழங்கப் பெறுகிறாள். "முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள் தேவி" (லலிதா)
சுமங்கலி - சுமங்கலி வடிவினள்.
சீர்-வடசொல்.

மங்கலப் பொருள்கள் இவர்களை அடைந்து அழகைப் பெறுவதால் கணவனோடு முறைப்படி சுகமாக வாழும் மனைவியரைச் சுமங்கலிகள் என்பர். அப்படி வாழும் சுமங்கலிகளின் வடிவில் தேவி விளங்குகின்றாள். சிறந்தவைகளை நடைமுறையில் அமைத்துச் சிறப்பற்றவைகளைத் தவிர்த்து வாழ்வது மங்களகரமான வாழ்க்கை. அவ்வாழ்க்கை வடிவில் இருப்பவள் தேவி. (லலிதா) சுமங்கலி என்னும் சொல்லுக்குப் பிரம்ம வித்யா வடிவினள் என்று பொருள் கொள்வாரும் உளர்.

(அடி-4) மயிட சங்காரி - மகிஷாசுரனைக் கொன்றவன்.

12. ஆருடி நனை துகில் களைந்துசெம் பட்டுடுத்
தஞ்சிலம் போலிடவிடைரங்
தாயிழை புனைந்திடும் பாங்கியர்கள் சூழநின்
அருகுவரு முன்னமதியங்
கூருடி வைத்தவிரு கோட்டிளந் திங்களெழில்
கொண்டதிரு நுதலின்மீது
குறுவெயர் பொடிப்பத் துடித்துவாய் புலரக்
குரல்கம்ம விம்மிவிம்மி
மாருடி யழுதகண் ணீரைத் துடைத்தன்னை
மடிமீ தெடுத்துவைத்து
மார்புற வணைத்துறுத் திடுமென்று நன்முத்து
மாலையை விலக்கஇளகிச

சேருடு குங்குமக் கொங்கையமு துண்கிளி
செங்கீரை யாடியருளே
சிறகிலகு கிரணமயில் வருணமிகு சொர்ணபுரி
செங்கீரை யாடியருளே. (2)

(அடி-1) ஆருடி - ஆற்றில் நீராடி. நனைதுகில்-நனைந்த ஆடை. வினைத்தொகை. ஓலிட - ஒலிசெய்ய. ஆயிழை ஆராய்ந்துஎடுத்த ஆபரணங்களை அணிந்தவள்; அன்மொழித்தொகை.

(அடி-2) குறுவெயர்பொடிப்ப - முத்து முத்தாகச் சிறிய வியர்வைத் துளிகள் தோன்ற.

(அடி-4) கொங்கை - தனம். செங்கீரையாடி அருள் - செவ்விய சொற்களைச் சொல்லியருள். செங்கீரை ஆடுதல் ஒரு நிர்த்தவிசேடம் என்பர் பெரியவாச்சான்பிள்ளை.

13. பாராட்டி யிருகண் மலர்த்துளி துடைத்துநற்
பருமணித் தொட்டிலாட்டிப்
பங்கயக் கண்ணுறங் காமைகண்டேந்தி
பணைத்தோளில் வைத்தணைத்தே
ஏராட்டி மெல்லென நடந்துலாத் திப்பொன்
னிழைத்து நவ மணிகுயிற்றி
இலகியிடும் அஞ்சனச் சாலையிற் குங்கும
எழிற்கலவை தோய்ந்தவிளவெந்
நீராட்டி வெண்டுகி லெடுத்துமர கதமேனி
நிறையுமீ ரம்புலர்த்தி
நிகமுச்சி மோந்துமண் சாந்திறெடு சாந்துகமழ்
நெற்றியிற் பொட்டுமிட்டுச்
சீராட்டி யன்னைகோ தாட்டெம் பிராட்டிவளர்
செங்கீரை யாடியருளே
சிறகிலகு கிரணமயில் வருணமிகு சொர்ணபுரி
செங்கீரை யாடியருளே. (3)

13. (அடி-1) இருகண்மலர்த்துளி - இரண்டு கண்களிலிருந்தும் ஆனந்தத்தால்தோன்றும் நீர். பங்கயக்கண் - தாமரை போன்ற கண். பணை-மூங்கில், "பணைத்தோள் (மீ. பி. த. 3)

(அடி-2) குயிற்றி - பதித்து. மஞ்சனசாலை - நீராடுமிடம்.

(அடி-3) வெண்டுகில்—வெண்மையான ஆடை. மண்சாந்து—மண்ணை எடுத்துச் சாந்தாக நெற்றியில் இடுதல்

வழக்கம். (மண்பொட்டணிந்து நீறிட்டு) பிரபுலிங்க லீலை. மாயை உற்செய். 46)

(அடி-4) மயில் - உவம ஆகுபெயர்.

14. கொங்கார் பசுந்தேன் றுளித்திதழ் அவிழ்த்திடுங்
கோகனக மலரும்மாவின்
கொழுந்தளிரும் வென் றசெங் காந்தளங் கையினுற்
குளிர்நிலவு பொழிசுரிமுகச்
சங்கேந்தி யேந்திள முலைப்பால் கறந்தன்னை
தண்பவள விதழ்நெரித்துத்
தங்கிவெடி யேருது பையப் புகட்டியே
தைவந்து எடுத்துமோந்து
கங்கா சலத்துவளர் கயல்பொருது நீண்டவிரு
கண்மலரி ஞெத்திமகிழக்
கருதுகற் பகத்தருவின் வளரிளங் கொம்பெனக்
காட்சிபெற வேவிளங்கும்
செங்காவி யிதழியணி கங்காளர் பங்கிறைவி
செங்கீரை யாடியருளே
சிறகிலகு கிரணமயில் வருணமிகு சொர்ணபுரி
செங்கீரை யாடியருளே. (4)

(அடி-1) கொங்கு - வாசனை. கோசனகமலர்-தாமரை மலர் சுரிமுகச் சங்கு - சுழிந்த முகத்தையுடைய சங்கு.

(அடி-2) பவளவிதழ் - பவழம் போன்ற உதடு. வெடியேருது— புரையேருமல். பைய - மெதுவாக.

(அடி-3) கயல் - மீன்.

(அடி-4) கங்காளர் பங்கிறைவி - வாமனர் செருக்கடைந்த காலத்தில் முழுவெலும்பை ஆபரணமாகக் கொண்ட சிவனது இடது பக்கத்தில் இருக்கின்ற பார்வதி. கங்காளம் - முழுவெலும்பு. "கங்காளந் தோண் மேலே காதலித்தான் காணேடீ" (திருவாசகம், திருச்சாழல், 11.)

15\. உவந்துள மிடங்கொண் டடங்கா மகிழ்ச்சியுடன்
ஓடரிக்கண் களிப்ப
உச்சிவட் டயினிநீர் சுற்றி நீறிட்டு
விட்டுனன்னை நிற்பமுன்னங்
தவம்பெரிது செய்திடுந் தாதைமக வான்முகந்
தண்ணளி: சுரந்துசெந்தேன்
தயங்குசெந் தாமரைப் பூவென மலர்ந்திடத்
தாதியர்கள் பாதுகாப்ப
நிவந்தெழில் கனிந்தநின் றிருமேனி மரகத
நிறங்கொழித் துத்தளும்ப
நின்குமுத வாய்நில வரும்பவிழி பாலினிடை
நீலமணி போல்விளங்கச்
சிவந்தகை வருந்தத் தவழ்ந்துவிளை யாடுகிளி
செங்கீரை யாடியருளே
சிறகிலகு கிரணமயில் வருணமிகு சொர்ணபுரி
செங்கீரை யாடியருளே. (5)

(அடி-1) ஓடு அரிக்கண் - செவ்வரி ஓடுகின்ற கண்ணை யுடையவள்.

(அடி-2) தாதை - தந்தை. மகவான் - இமவான். தயங்கு - விளங்குகின்ற. தாதியர்கள் - பணிவிடை செய்யும் பெண்கள்.

(அடி-3) நிவந்து-தோன்றி. எழில் கனிந்த - அழகு மிகுந்த. நின்திருமேனி - உனது சரீரம். குமுதவாய் - செவ்வாம்பல் போன்ற வாய். உவமைத்தொகை.

(அடி-4) சிவந்த கைவருந்தத் தவழ்ந்து விளையாடு - சிவந்த கைகள் வருந்தும்படி தவழ்ந்து விளையாடுகின்ற.

## வேறு

16\. தங்க மிழைத்திடு முன்கை முதாரி
தகுதோள் வளையாடச்
சரிகட கம்பவ ளங்கர வளையல்
தழைந்து தவழ்ந்தாடத்
திங்க ளுதற்றில கத்தொடு முத்துச்
சுட்டி சிறந்தாடத்
திருமுக மீதணி வயிர மழுத்திய

திகழ்சூ ழியமாடப்
பொங்கு சதங்கை சிலம்பொடு கிண்கிணி
பொன்கொலு சொடும்ஆடப்
புனைமணி மேகலை யரைஞா ணொடுமன்
பொலிநூ லிடையாட
அங்கலும் மேனி பசேலென வொளிசெய
ஆடுக செங்கீரை
அருமை படைத்திடு சொர்ண புரிக்கிளி
ஆடுக செங்கீரை. (6)

(அடி-1) முதாரி - முன்கைக் கங்கணம். "முதாரியும் ஒளிகால" (முத்துக்,பி. த. செங். 7.) சரிகடகம்-சரிந்தகங்கணம். பவளம் கர வளையல் - சிவந்த கைகளில் அணிந்த பவளத்தாலான வளையல்கள்.

(அடி-2) திங்கள் - சந்திரன். நுதல் - நெற்றி. திலகம் - பொட்டு. முத்துச் சுட்டி - முத்துக்களால் செய்யப் பட்ட நெற்றியணி. "சுட்டி சிதையக் குட்டத்துக் குளித்து" (பெருங். உஞ்சைக். 40, 102) சூழியம்- உச்சிக் கொண்டையில் அணியும் ஆபரணம். "விட்டிலகு சூழியம் விழுங்கு சிறுகொண்டை" (திருவிளை. தடாதகை, 16)

(அடி-3) சதங்கை - பெண்கள் காலில் அணிந்து கொள்ளும் அணி. "பரியக நூபுரம் பாடகஞ் சதங்கை" (சிலப். 6. 84). கிண்கிணி - கிண் கிண் என்ற ஒலி யுடைய அணி.

(அடி-4) மேனி - உடல். பசேலென - பசுமையாக

17. குழுமிய கற்பக தருவினில் எழில்பெற
மேவு கொழுந்தேசீர்
குலவமு தப்பெரு வயலினி விளமுளை
யான கரும்பேதேன்
ஒழுக முறுக்கவி ழிதழ்செறி கமலநல்
வாவி யரும்பேசூழ்
உறுபிற விப்பிணி வினையை யொழிப்பவர்
தேடு மருந்தேயீர்
எழுபுவ னத்தினு மெழுதரும் வடிவுள
தான வணங்கேவான்

இமையவர் மற்றுள முனிவர் துதித்திசை
பாட வருந்தேவே
அழகிய பொற்றிரு முகமினி தசைதர
ஆடுக செங்கீரை
அருமை படைத்திடு சொர்ண புரிக்கிளி
ஆடுக செங்கீரை. (7)

(அடி-1) கற்பகதரு - கற்பகமரம். தேவலோகத்தில் உள்ளது. சீர் - புகழ்: உரிச்சொல்.

(அடி-2) முறுக்கு அவிழ் - இதழ்கள் மலர்தல். வாவி - குளம். பிறவிப்பிணி - பிறவிநோய்.

(அடி-3) ஈர்எழுபுவனம் - பதினான்கு உலகம்,கீழ்உலகம் ஏழு, அவை :—அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம்; மகாதலம், பாதலம். மேலுலகம் ஏழு:— பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகலோகம், சத்தியலோகம். எழுத அரும் வடிவு - எழுதுவதற்கு இயலாத உருவம். அணங்கு - தெய்வப் பெண். இமையவர் - தேவர்.

(அடி-4) பொற்றிருமுகம் - பொன் + திரு+மு க ம். பொன் போன்ற அழகிய முகம். இனிது - இனிமை யாக. அசைதர - அசைய. ஆடுக: வியங்கோள் வினைமுற்று.

18. கருதரு நித்திய சுமங்கலி செங்கோ செங்கீரை
கடலமு திற்றெளி கனிமொழி செங்கோ செங்கீரை
திருவளர் முத்தி யருட்கொடி செங்கோ செங்கீரை
திகழ்தரு முத்தமி யம்பிகை செங்கோ செங்கீரை
அருவரை பெற்ற இளம்பிடி செங்கோ செங்கீரை
அகிலம் வளர்த்த கருங்குயில் செங்கோ செங்கீரை
சுருதி படித்த பசுங்கிளி செங்கோ செங்கீரை
சொர்ண மளித்திடு சுந்தரி செங்கோ செங்கீரை. (8)

(அடி-1) நித்தியம் - எப்பொழுதும். கனிமொழி - பழம் போன்ற இனிமையான சொல்.

(அடி-2) கொடி : ஆகுபெயர்.

(அடி-3) அருவரை - அருமையான இமயமலை. பிடி - பெண் யானை. அகிலம் - உலகம்.

(அடி-4) சுருதி - வேதம்.

19\. பந்து கழங்கணி நங்காய் செங்கோ செங்கீரை
பண்கனி யும்சிறு கொம்பே செங்கோ செங்கீரை
சந்தத முந்தொழ வந்தாய் செங்கோ செங்கீரை
சங்கணி யும்புயல் தங்காய் செங்கோ செங்கீரை
இந்தொளிர் எந்தையொர் பங்காய் செங்கோ செங்கீரை
என் றனை யும்பணி கொண்டாய் செங்கோ செங்கீரை
சிந்தை வளர்ந்த கரும்பே செங்கோ செங்கீரை
செம்பொ னளந்திடும் அம்பா செங்கோ செங்கீரை. (9)

(அடி-1) பண்-பாட்டு.

(அடி-2) சந்ததம் - எப்பொழுதும். சங்கணியும் புயல் - திருமால்.

(அடி-3) இந்து - சந்திரன். என் றனையும் - என்னையும். பணி- ஏவல்.

(அடி-4) சிந்தை - மனத்தில். "சிந்தையாலும் சொல்லாலும்" (திவ். திருவாய். *6, 5, 11.*)

## 3. தாலப் பருவம்

### ஆசிரிய விருத்தம்

20\. கடவா ரணங்க டிரிதரும்வெங்
காடு மலையும் கான்யாறும்
கலந்த சைய மால்வரையிற்
காகங் கவிழ்ப்பக் குறுமுனிவன்
இடமாய்ப் பெருகிச் சோணாட்டின்
எல்லை முழுதுந் தாய்முலைப்பால்
என்னப் பைங்கூழ் தமைவளர்த்தே
இலகும் பொன்னி வடகரையிற்
குடவரல் வளைகள் வயிறுளைந்து
கொழித்த கொழுத்த கதிர்முத்தம்
குழைந்து கறுத்த செழுஞ்சேற்றுக்
குளிர்நீர் வண்ணப் பண்ணைவயல்
மடைவாய்த் தவழுந் திருநாங்கை
வாழ்வே தாலோ தாலேலோ
வளரும் பசும்பொன் னளந்திடுகண்
மணியே தாலோ தாலேலோ. (1)

(அடி-1) கடவாரணங்கள் - மதங்கொண்ட யானைகள். கான் யாறு - காட்டாறு. காகம் கவிழ்த்த வரலாறு:— அகத்தியர்வடக்கிலிருந்து வரும்பொழுது காவிரியைத் தன் கமண்டலத்தில் கொண்டு வந்தார். இந்திரன் வேண்டுகோளால் விநாயகர் காக உருக்கொண்டு கமண்டலத்தை உருட்டி விடக் காவிரியாய்ப் பிரவகித்தனள். குறுமுனிவன் - அகத்தியர்.

(அடி-2) சோணாடு - சோழ நாடு. பைங்கூழ் - பசுமையான பயிர்கள். இலகும் - விளங்கும். பொன்னி - காவிரி. தான் பாய்கின்ற நாட்டில் பொன்னைக் கொழித்து வருவதால் பொன்னி எனப்பெயர் பெற்றது.

**21.** குடப்பால் சொரியுங் கருமேதி
குமுதம் மேய்ந்து கோகனகக்
குளிர்மெல் லரும்பை மென்றுயர்நீர்
குளிரியுழக்கி நாவுளைத்துச்
சுடர்ப்பூங் குவளை கறித்துவள்ளை
துவைத்துக் குதட் டி நிழற்காஞ்சி
சூழ லுறங்க உறங்காது
துணைவற் பிரிந்ததார் போல்மறுகு
கடற்சேர் காத வழியுமணங்
கமழும் பவளக் குலையுமர
கதம்போற் றிரண்ட பைங்காயும்
கவினு நெடிய செழுங்கமுகின்
மடற்பூம் பாளை திகழ்நாங்கை
வாழ்வே தாலோ தாலேலோ
வளரும் பசும்பொன் னளந்திடுகண்
மணியே தாலோ தாலேலோ. (2)

(அடி-1) குடப்பால் - குடத்தளவுபால் சொரியும். மேதி - எருமை. கோகனகம் - தாமரை மலர்.

(அடி-2) கறித்து - கடித்து. காஞ்சி - காஞ்சிமரம். சூழல் - அடியில். உறங்க - தூங்க.

(அடி-3) பைங்காய் - பசுமை+காய். செழுங்கமுகின் - செழுமையான பாக்குமரத்தின்.

(அடி-4) பூம்பாளை - அழகிய பாளைகள்.

"செழுநீ கமுகின் மடற்பூம்பாளை திகழ்"; என்ற அடியால் நாங்கூரில் பாக்குமரங்கள், செழித்து வளர்ந்து இருந்தன என்று அறியலாம். நால் - நாக்கு.

22. பொன்னங் கமல மலர்வாவிப்
புறஞ்சூழ் பெரிய கோட்டகத்துப்
புதுநீர் பாயப் புறம்ப ணையில்
புகுந்தே நடுமின் னுழத்தியர்தம்
சின்னஞ் சிறிய பேதையர்கள்
சிறுவீ டமைத்து முத்தளந்து
திகழ்வெண் சங்கின் உலையேற்றித்
தேன்வார்த் தூரு மாமைபிடித்
துன்னும் வனப்பும் வாய்ப்பவடுப்
புயரக் கூட்டிச் செங்குமுத
ஒளிர்மென் மலரை வைத்துநெருப்
பூதி யூதி விளையாடும்
மன்னும் புகழ்சேர் திருநாங்கை
வாழ்வே தாலோ தாலேலோ
வளரும் பசும்பொன் னளந்திடுகண்
மணியே தாலோ தாலேலோ. (3)

(அடி-1) மலர்வாவி - மலர்கள் நிறைந்த குளம். உழத்தியர் - மருத நிலத்துப் பெண்கள்.

(அடி-2) பேதை - மகளிர் பருவம் ஏழனுள் ஐந்து வயது முதல் ஏழு வயது வரையுள்ள பருவத்துப் பெண்.

(அடி-3) வனப்பு - அழகு.

(அடி-4) மன்னும் - நிலைபெற்ற.

23. மூரிப் பகடு பூட்டியுழும்
முரற்கை யுழவர் செங்கரும்பை
முறித்தேர் நடத்தி யடித்தோட்ட
முழுவெண் ணிலவு சொரிதரளம்
சேரத் தெறித்துக் கரையெங்கும்
திகழத் தவழ்ந்து சூலுளைந்து
திரியும் சங்கம் கருவுயிர்த்த
திரண்மா மணியுங் கலந்தசெழும்
போரிற் குவியக் கடைசியர்கள்

புதுக்கள் ளிறுக்கும் குடத்தளவாய்ப்
பொழிய வளந்து கொடுப்பஅவர்
புறத்துப் போந்து சிறுர்கள்முத்து
வாரிக் கொழிக்குக் திருநாங்கை
வாழ்வே தாலோ தாலேலோ
வளரும் பசும்பொன் னளந்திடுகண்
மணியே தாலோ தாலேலோ. (4)

(அடி-1) மூரி – வலிமை. பகடு - எருது. முரற்கை - பாடுதல். தரளம் - முத்து.

(அடி-2) சூல் – கருப்பம். உளைந்து - வருந்தி.

(அடி-3) கடைசியர்கள் - மருதநிலப் பெண்கள். சிறுர்கள் - சிறுவர்கள்.

24. காலைப் பொழுதின் மலர்ந்தசெழுங்
கமல முகமும் கனிவாயும்
கதிர்வெண் டரள மணிநகையுங்
கனகக் குழைநின் றசைந்தாடும்
கோல வள்ளைக் கொடிபோலக்
குலவி யிலகும் வார்காதும்
கூர்வேல் விழியும் அமுதமெனக்
குளிர்ந்த மொழியும் புழுகொழுகும்
நீலக் குழலுந் திகழ்ந்தோங்க
நிறைந்த திருப்பாற் கடற்பிறந்து
நிலவும் செல்வப் பெருந்திருவை
நெடிய தடமார் பினிற்படைத்த
மாலுக் கிளையாய் திருநாங்கை
வாழ்வே தாலோ தாலேலோ
வளரும் பசும்பொன் னளந்திடுகண்
மணியே தாலோ தாலேலோ. (5)

(அடி-1) கமலமுகம் : உவமைத் தொகை. கனிவாய். கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாய். கனகம் – தங்கம். குழை - காதணி. "குழையொடு பொருதுகொ லைக்கணை" (மீனுட்சி. பி. த். சப்.9.)

(அடி-2) வள்ளைக் கொடி - ஒருவகைக் கொடி. "மகளிர் வள்ளை கொய்யும்" (பதிற்றுப் 29, 2.) இலகும்-பிரகாசிக்கும், வார்காது - நீண்டகாது. கூர் - கூர்மை. வேல்விழி - வேல் போன்ற விழி.

(அடி-3) புழுகு ஒழுகும் நீலக் குழல் - புனுகு என்னும் வாசனைப்பொருள் கமழும் கருமையான கூந்தல். பெருந்திருவை நெடிய தடமார்பினிற் படைத்தமால்- இலக்குமியை அகன்ற மார்பில் வைத்துக்கொண்டுள்ள திருமால்.

வேறு

25 பிழையைச் செயினும் மெய்யடியர்க்
கருள்புரி தாயே தாலேலோ
பெருகிப் புகழ்நிறை யிமயத்
திறைசிறு பேதாய் தாலேலோ
இழையொத் தணிபெறு படிவத்
துடியிடை மாதே தாலேலோ
இதயத தினில்நினை பவருக்
கினிமைசெய் தேனே தாலேலோ
வழுதிக் கிருதிரு நயனத்
தொளிமணி போல்வாய் தாலேலோ
மகிமைக் குலகினில் நிகரொப்
பிடவரி தானாய் தாலேலோ
தழைசித் திரமயில் எழில்மொய்த்
தொளிபுகழ் பாவாய் தாலேலோ
தமிழுக் கிலகுபொன் னுருகித்
தருகிளி தாலோ தாலேலோ. (6)

(அடி-1) மெய்யடியர் - உண்மையான பக்தர்கள். இமயத்து இறை - இமவான்.

(அடி-2) இழை - நூலிழை. துடியிடை - உடுக்கை போன்ற இடை. இதயத்தினில் நினைபவருக் கினிமை செய்தேனே – உள்ளன்போடு நினைப்பவர்களுக்கு நன்மையைச் செய்கின்ற தேன் போன்றிருப்பவளே.

(அடி-3) வழுதி – பாண்டியன். மகிமை - பெருமை.

(அடி-4) எழில் - அழகு.

26. கனியிற் கடல்வரு மமுதிற்
குளிர்மொழி மாதே தாலேலோ
கருணைத் திருமுக மலரச்
சிறுநகை கூர்வாய் தாலேலோ

எணை இப் பிறவில் வினைவிட்
டொழியவே ஆள்வாய் தாலேலோ
எழுதற் கரியநல் லுருவத்
தொருவடி வானாய் தாலேலோ
வனசத் துறைகொடி பணிசிற்
றிடையுடை யாளே தாலேலோ
மதுரித் திடுசுவை யெனவிப்
புவிதொழும் வாழ்வே தாலேலோ
தனையொப் பருமர கதமற்
புதமணி தாலோ தாலேலோ
தமிழுக் கிலகுபொன் னுருகித்
தருகிளி தாலோ தாலேலோ. (7)

அடி-1) குளிர்மொழி - இனிமையான சொல்.

(அடி-2) வல்வினை - கொடிய செயல். ஆள்வாய் - ஆட்கொள்வாய்.

(அடி-3) வனசம் – தாமரை. மதுரித்திடும் - இனித்திடும் புவி - பூமியிலுள்ளவர்கள் : இடவாகு பெயர்.

(அடி-4) மரகதம் – நவமணியுள் ஒன்றான பச்சை இரத்தினம், நவமணிகள்: கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புட்பராகம், வைடூரியம், வயிரம். இலகு - விளங்குகின்ற.

### வேறு

27. திகழ்பார் துதித்திடுதென் மதுராபுரிக் கரைசி
செழுநான் மறைத்தலைவி தாலேலோ
நிகழ்கா விரிக்குவட கரைகோயில் பொற்புரிசை
நெடுநாள் படைத்தவுமை தாலேலோ
புகழ்சேர் அருட்டுறையில் வலிதே தடுத்தடிமை
புகும்வாழ் வளித்தகனி தாலேலோ
மகிழ்கூர் தரச்சொர்ணம் வருநா வலர்க்குதவி
வளர்பாட லுற்றவுமை தாலேலோ. (8)

(அடி-1) பார் – பூமியிலுள்ளவர்கள்: இடவாகு பெயர். அரைசி - அரசி என்பதன் போலி. நான்மறை - நான்கு வேதம்.

(அடி- 2) பொற்புரிசை - பொன்னால் செய்யப்பட்ட மதில்.

(அடி-3) புகழ்சேர்......தடுத்தடிமை புகும் : இவ்வடி சுந்தரமூர்த்தி நாயனாரை வலியவந்து தடுத்து ஆட்கொண்ட செயலைக் குறிப்பிடுகின்றது.

(அடி-4) மகிழ்கூர் - மகிழ்ச்சி மிக்க. சொர்ணம் - தங்கம். நாவலர் - சுந்தரமூர்த்தி நாயனார்.

28. கொங்கவிழ் பங்கய நிகர்சீ றடியாய் தாலோ தாலேலோ
கொஞ்சு பசுங்கிளி யெழிலார் மொழியாய் தாலோ
தாலேலோ
அங்கலு ழுந்திரு முகமா மயிலே தாலோ தாலேலோ
அம்பட ருங்கதிர் வடிவேல் விழியாய் தாலோ
தாலேலோ
எங்கு நிறைந்திடு பரிபூரணியே தாலோ தாலேலோ
இன்ப மிகும்பர கதிவீ டருள்வாய் தாலோ தாலேலோ
சங்கரர் பங்குறை யருமா மணியே தாலோ தாலேலோ
தன்பொ னளந்திடு கருணா நிதியே தாலோ தாலேலோ. (9)

(அடி-1) கொங்கு - தேன். பங்கயம் — தாமரை.

(அடி-3) பரிபூரணி - எங்கும் எப்போதும் எல்லாமாக இருப்பவள். புருடார்த்தங்களை வாரி வழங்கினாலும் எந்த நிலையிலும் குறைவை அடையாதவள். ஆதலால் அவள் பரிபூரணி எனக் கூறப்படுகிறாள்.

(அடி-4) சங்கரர் - மங்களத்தைச் செய்பவர் : சிவபெருமான்.

29. அந்தி யிளம்பிறை திகழ்வா ணுதலாய் தாலோ தாலேலோ
அண்டர் பணிந்திடு கனியே யமுதே தாலோ
தாலேலோ
கொந்த விழுந்தளிர் புரைசே வடியாய் தாலோ தாலேலோ
கொம்பின் இளங்குயில் இயலார் கொடியே தாலோ
தாலேலோ
சுந்தரர் செந்தமிழ் மகிழ்கா ரணியே தாலோ தாலேலோ
துன்று மருந்தவர் மனம்வா ழுனமே தாலோ
தாலேலோ
சந்தத மும்தொழ வருமா மணியே தாலோ தாலேலோ
தன்பொ னளந்திடு கருணா நிதியே தாலோ தாலேலோ.
(10)

(அடி-1) அந்தி - மாலைக்காலம். வாணுதல் - வாள்+நுதல். அண்டர் - தேவர். கொந்து - கொத்து என்பது எதுகை நோக்கி வல்லினம் மெல்லினமாயிற்று. புரை : உவம உருபு.

(அடி-3) அனம் - அன்னம்.

(அடி-4) சந்ததம் - எப்பொழுதும்.
(முடிபு) வாணுதலாய், கனியே, அமுதே, சேவடியாய், கொடியே, மகிழ்காரணியே, அனமே, மாமணியே, கருணைநிதியே என்க.

## 4. சப்பாணிப் பருவம்

30. தேமருவு நாளவட் டந்திகழு முநதியந்
தேவுக்கு வைகுண்டமுந்
தெண்ணீர் நிறைந்தமா னதவாவி யாயிரத்
தெட்டிதழ் முறுக்குடைந்து
காமரு பசுந்தேறல் கொப்புளித் திலகுபொற்
கமலத்தி னிட்டைபுரியுங்
கடவுட்கு வளர்சத்ய லோகமும் ஆயிரம்
கண்ணற்கு விண்ணுலகமும்
பாமருவி யெண்ணரும் பலவண்ட கோளப்
பரப்புமன் னுயிர்கட் கெலாம்
பற்பல தனுகரண புவனபோ கங்களும்
பரிவொடு படைத்ததெய்வத்
தாமரை மலர்ந்திட்ட செங்கைத் தலத்திறைற்
சப்பாணி கொட்டியருளே
தன்னுளங் களிகூர்ந்து பொன்னளந் திடுவல்லி
சப்பாணி கொட்டியருளே. (1)

அடி-1) நாளவட்டம் - தண்டை. உந்தியந்தேவு - திருமால்.

(அடி-2) பசுந்தேறல் - தேன். "பசுந்தேறல் ஆறலைக்கும்" (மீ. பி. த. 18) சத்யலோகம் - பிரமன் இருக்கும் உலகம். ஆயிரங்கண்ணன் - இந்திரன்.

(அடி-3) பரிவொடு - அன்போடு.

(அடி-4) சப்பாணிகொட்டல் -இரண்டு கைகளையும் சேர்த்துக் கொட்டுதல்; ஸ : பாணி என்பது சப்பாணி என்று ஆயிற்று. களிகூர்ந்து-மகிழ்ச்சி மிக்கு.

31. குமிழ்நாள் மலர்வெள்கி முத்தணிந் திலகொளி
கொழிக்கும்நா சிகையும்மகரக்
குழையசைந் தாடுகொடி வள்ளை வார்காதும்
குனித்தவிற் புருவநுதலும்
அமுதமு றியகதிர் முருக்கிதமு முழுமதிய
தாமென விளங்குமுகமும்
அரிபரந் தகல்விழியும் எழில்பெறப் பவளவாய்
அன்னநடை வாய்ந்தசெந்தேன்
கமழுமல் லிகையாரம் நிறையளக பாரம்
கவின்செயச் செந்திருவென
கண்காட்சி பெறநின்ற பாண்டிமா தேவியிரு
கண்மணிய தாய்வளர்ந்தே
தமிழுலா வியமதுரை மாநகர் புரந்தகிளி
சப்பாணி கொட்டியருளே
தன்னுளங் களிகூர்ந்து பொன்னளந் திடுவல்லி
சப்பாணி கொட்டியருளே. (2)

(அடி-1) நாசிகை - மூக்கு. நாஸிகா : வடசொல்.

(அடி-2) முழுமதி - பூரணசந்திரன். அரி - செவ்வரி. அகல்விழி - அகன்ற கண். பவளவாய் -- பவழம் போன்ற சிவந்த வாய்: உவமைத் தொகை.

(அடி-3) அளகம் - கூந்தல். கவின்செய -- அழகுசெய்ய.

(அடி-4) மதுரைமாநகர் புரந்த கிளி - மதுரை மாநகரத்தில் அரசாட்சி செய்த தடாதகைப் பிராட்டியார்.

32. நதிபரந் திடுதிரு முனைப்பாடி நாடாகும்
நரசிங்க முனையரென்னும்
நாமவே லரசிளங் குமரனுக் கேற்பமன்
னவனன்பு புரிசுதனெனக்
கதிகொள்வாம் புரவிமத க்களிறேற்றம் விற்றொழில்கள்
கற்றுமறை முற்றுணர்ந்து
காசினி புரந்திடு மிராசர்திரு வும்பெருமை
கவினும்வை திகத்திருவும்வந்
ததிகவை போகநிறை மங்கள மணம்புரியும்
அணிமணிக் காவணத்துள்
ஆவணங் காட்டியென் னடிமையென் றேவழக்
கதனைவென் றையனுண்ட

சதுரர்சுந் தரர்திருப் பாடல்கொண் டருள்செல்வி
சப்பாணி கொட்டியருளே
தன்னுளங் களிகூர்ந்து பொன்னளந் திடுவல்லி
சப்பாணி கொட்டியருளே. (3)

(அடி-1) நாமவேல் - அச்சத்தைத் தருகின்ற வேல். அரசிளங் குமரனுக்கு ஏற்ப - அரசிளங் குமரனைப் போன்று தமக்கு அன்பினால் மகனுந்தன்மை. அன்பு புரிசுதன் - காதற் பிள்ளை.

(அடி-2) வாம்புரவி - வாவும்புரவி—தாவிச் செல்லும் குதிரை. மதகளிறு -மதங்கொண்ட யானை, காசினி - பூமி.

(அடி-3) ஆவணம் - ஓலை. உரிமைப் பத்திரம் "ஒராவணத் தான் எனையாளும் கொண்ட நம்பிரானார்" (தே. 977.)

(அடி-4) சதுரர் - சமர்த்தர்.

33. பொய்கையம் புனல்மூழ்கி விளையாடும் அருமறைப்
புதல்வரிரு வரிலொருவனைப்
போழ்வாய் திறந்தொரு கராம்விழுங் கிச்செழும்
புனலிடை யொளிப்பநெடுநாள்
எய்தநீர் சுவறிப் பெருக்கொழிந் திடும்வாவி
யின்பெருங் கரையினின்றே
இசைத்தபதி கத்தினுக் குருகிமழை சளசளென்
றிமிழிசை கறங்கவூற்ற
வையகம் புகழவரு தெய்வே தியர்முக
மலர்ந்திட விலஞ்சிநிறைய
மருவுபுக் கொளியூரின் முதலைவாய்ப் பிள்ளையினை
வருவித்த மகிமையோங்கும்
சைவர்சுந் தரர்திருப் பாடல்கொண் டருள்செல்வி
சப்பாணி கொட்டியருளே
தன்னுளங் களிகூர்ந்து பொன்னளந் திடுவல்லி
சப்பாணி கொட்டியருளே. (4)

(அடி-1) பொய்கை — குளம். புனல் - நீர். போழ்வாய் - பிளந்தவாய். கராம் - முதலை. ஒளிப்ப - மறைய.

(அடி-2) நீர் சுவறி - நீர் வற்றி. கறங்க - ஒலிக்க. வையகம் - பூமியிலுள்ளோர்.

(அடி-3) மகிமை - சிறப்பு.

சுந்தரர் சேரமான் பெருமானை நினைந்து மலைநாடு செல்லத் திருவுளங்கொண்டு, சோழ நாட்டைக் கடந்து கொங்கு நாட்டில் திருப்புக்கொளியூர் அவிநாசியை அடைந்து திருவீதி வழியாகச் சென்று கொண்டிருந்தார். அங்கே ஒரு வீட்டில் மங்கல ஒலியும், அதன் எதிர் வீட்டில் அழுகையொலியும் எழுதலைக் கேட்டு அங்குள்ளோரை வினவ, அவர்கள் நிகழ்ந்ததைக் கூறினார்கள்.

'ஐந்து வயதுநிரம்பப் பெற்ற சிறுவர் இருவர் குளத்தில் குளித்தபோது ஒருவனை முதலை விழுங்கியது. மற்றவன் பிழைத்தான். பிழைத்த சிறுவனுக்கு இவ்வீட்டில் உபநயனம் நடக்கிறது. முதலைவாயில் அகப்பட்டிருந்த சிறுவனுடைய பெற்றோருக்குப் புதல்வன் நினைவு வந்தமையால் வருந்துகின்றனர்.' என்று சொல்லக் கேட்டுச் சுந்தரர் வருத்தமடைந்தார். இழந்த சிறுவனின் பெற்றோர் சுந்தரர் வருகையை அறிந்து முகமலர்ச்சியோடு வரவேற்றனர். 'தாங்கள் இங்கு எழுந்தருளியது எங்கள் தவப்பேறாகும்' என மகிழ்ந்துரைத்தார்கள். சுந்தரர் ''இவ்வந்தணர் தம்மகனை இழந்த துக்கத்தையும் மறந்து என்னை வரவேற்பதில் மகிழ்ச்சி கொள்கின்றார். இவர்கள் புதல்வனை முதலை வாயினின்று அழைத்துத் தந்த பின்னரே அவிநாசிப் பெருமானை வழிபடவேண்டும்'' என்று நினைத்து அக்குளம் இருக்குமிடத்தையடைந்து இறைவனை வேண்டி ''எற்றான் மறக்கேன்'' என்று தொடங்கித் திருப்பதிகம் பாடினார். முதலை கரைக்கு வந்து தான் விழுங்கிய புதல்வனை உமிழ்ந்தது. புதல்வனைக்கண்ட தாய் தழுவி எடுத்தாள். தாயும் தந்தையும் சுந்தரரை வணங்கினர். சுந்தரர் அவிநாசித் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டார் என்ற நிகழ்ச்சியை ஆசிரியர் இங்குக்குறிப்பிடுகின்றார்.

34. அமுதூறும் ஒளிபிளம் பிறைவேணி யண்ணலுறை
ஆலயம் தொழுதுபோற்றி
அன்பிற் கலந்துதரு சேரர்பெரு மான்பொருள்
அனைத்துமுரு கன்பூண்டியிற்
குமிழ்நாண் மலர்க்காட் டினிற்பறி கொடுத்துளங்

குறையுற்று மீண்டுபாண்டிக்
கொள்ளையிடு பொருளெலா முள்ளபடி வாங்கிமுது
குன்றினிற் பெற்றபொருளை
உமிழ்நாண் மணிக்கலன் றுங்குமங் கையர்கொங்கை
ஒளிர்குங் குமம்கரைத்தே
ஓடும்முத் தாற்றினி லிட்டுநல மோங்குமா
ரூர்க்குளத் தினிலெடுக்கும்
தமிழ்நாவ லூரன்வளர் பாடல்கொண் டருள்செல்வி
சப்பாணி கொட்டியருளே
தன்னுளங் களிகூர்ந்து பொன்னளந் திடும்வல்லி
சப்பாணி கொட்டியருளே. (5)

(அடி-1) இளம்பிறைவேணி யண்ணல் - சிவபெருமான். சுந்தரர் சேரர்கோனுடன் சிலநாட்கள் தங்கியிருந்து திருவாரூர் செல்ல நினைத்துச் சேரரிடம் சொல்ல, சேரமான் தம் திருமாளிகையிலுள்ள பொருட்களைப் பொதி செய்து. உடன் அனுப்பி வைத்தார். சுந்தரர் வழிபலவும் கடந்து கொங்கு நாட்டுத் திருமுருகன் பூண்டி வழியே செல்லுங்கால், சிவபெருமான் பூதகணங்களை வேடுவராகச் சென்று வழிப்பறி செய்துவருமாறு பணித்தருள, அவ்வண்ணமே பூதகணங்கள் வேடர்களாய்ச் சென்று அச்சுறுத்திப் பொருட்களைப் பறித்துக் கொணர்ந்தன. சுந்தரர் திருமுருகன் பூண்டித் திருக்கோயில் இறைவரை யணுகி "எற்றுக்கு இங்கிருந்தீர்" என்ற மகுடத்தோடு பதிகம் பாடினார். கொள்ளையிடப் பெற்ற பொருள்களை வேடுவர்கள் மீளக் கொண்டு வந்து குவித்தனர் என்ற வரலாற்றை ஆசிரியர் இங்குக் குறிப்பிடுகின்றார்.

35. செய்யதண் டளிர்விரவு செண்பகா டவிமருவு
தேன்மாரி பொழியவோங்கும்
செங்நெலங் கழனிமிகு கன்னலின் காடெனத்
திகழ்தரப் புகழ்படைத்துப்
பையரவு மணிமுடி சுமந்தபார் மீதிலுயர்
பரிவுபெறு திருநாவலூரர்ப்
பதிவாழ அருமறைப் பொருளுணர்ந் தாகமம்
பண்புறு கருத்துமுற்றிப்
பொய்கடிந் தந்தணர் குலத்தினி லுதித்துமிப்

பொருளினை விரும்பினனெனப்
பொன்னுக் கொளித்திருந் திலகுதிரு விளையாடல்
பொற்புற நடித்தருள்செயுஞ்
சைவநாய கன்மருவு துய்யகோ மளவல்லி
சப்பாணி கொட்டியருளே
தன்னுளங் களிகூர்ந்து பொன்னளந் திடுவல்லி
சப்பாணி கொட்டியருளே. (6)

(அடி-1) அடவி - காடு. கழனி - வயல்- க்ன்னல் - கரும்பு.

(அடி-2) பையரவு - படத்தையுடைய நாகப்பாம்பு. பார் - பூமி.

(அடி-3) இலகு - விளங்குகின்ற. பொற்புற - அழகுற.

(அடி-4) சைவநாயகன் - சிவபெருமான். துய்ய - தூய்மையான, களிகூர்ந்து - மகிழ்ச்சி மிகுந்து.

36. கட்டழல்கள் கக்கும்விழி நச்சர வணைத்துயில்
கழித்துவளர் மெய்க்கருணையால்
கட்பெறு மகிழ்ச்சிபெறு பத்துரு வெடுத்துல
கனைத்தையும் அளித்தவனும்வாழ்
நெட்டிதழ் மலர்க்கமல மட்டவிழ் பொகுட்டின்மிசை
நிட்டைசெய் மறைக்கடவுளும்
நெற்றிவிழி பெற்றவர் மருத்துவர் வசுக்களொடு
நித்திய தனுத்தலைவரும்
விட்டொளி கொழிக்குநெடு வச்சிர மெடுத்திலகு
வெற்பினிரு பட்சமரியும்
வெற்றிகொள் மருத்துவனும் உட்கிட வொளித்துவரும்
வெட்கமொடு திக்கிலுலரக்
கொட்டமிடு துட்டவசு ரப்படை யடக்குமயில்
கொட்டியருள் சப்பாணியே
கொற்றமிகு பொற்குவிய விட்டள வளக்குமயில்
கொட்டியருள் சப்பாணியே. (7)

(அடி-1) நச்சு அரவு - விஷத்தையுடைய பாம்பு.

(அடி-2) நெட்டிதழ் - நீண்ட இதழ்களையுடைய.மட்டு - தேன். மறைக்கடவுள் - பிரமன். நெற்றியில் விழி பெற்றவர் - சிவன். மருத்துவர் - அசுவினி தேவர்கள்.

வசுக்கள் - அஷ்ட வசுக்கள். (அனலன், அனிலன் ஆபன், சோமன், தரன், துருவன், பிரத்தியூடன் பிரபாசன்)

(அடி-3) முன்பு ஒரு காலத்தில் மலைகளெல்லாம் பறவைகள் போல இறகு உடையனவாயிருந்து, எங்கும் பறந்து தங்கி உயிர்களுக்குத் தீங்கு செய்ததனுல் இந்திரன் கோபித்துத் தனது வச்சிராயுதத்தால் மலைகளின் சிறகுகளை அறுத்துத் தள்ளினுன். "மலைச்சிற கரிந்த வச்சிர வேந்தற்கு" (சிலப். 14. 94.)

(அடி-4) கொட்டம் - குறும்பு. குயில்: ஆகுபெயர். கொற்றம் வெற்றி.

வேறு

37. பொற்பார் கடைக்கணருள் வைத்தாரும் வெற்பரசி
சப்பாணி கொட்டியருளே
புக்கேழ் கருக்குழி யொழித்தே யெடுத்தகொடி
சப்பாணி கொட்டியருளே
சொற்கோ கிலக்குரல் பழுத்தே றிசைத்தலைவி
சப்பாணி கொட்டியருளே
சொர்க்காதி பற்பதவி பெற்றோர் துதித்தகனி
சப்பாணி கொட்டியருளே
முற்றுத கற்பக தருப்போல் எழில்கொள்கிளி
சப்பாணி கொட்டியருளே
முத்தே வினைத்தரு துரைச்சி புகழ்க்கிறைவி
சப்பாணி கொட்டியருளே
தற்காரணச் சொருண மெய்ப்பேர் படைத்தவுமை
சப்பாணி கொட்டியருளே
தக்கோர் மனக்கமல நற்போது தித்தவொளி
சப்பாணி கொட்டியருளே. (3)

(அடி-1) பொற்பு - அழகு. ஆர் - நிறைந்த. கடைக்கண்; இலக்கணப்போலி. வெற்பு - மலை.

(அடி-2) கோகிலம் - குயில். சொர்க்கம் ஆதி - சொர்க்கம் முதலான.

(அடி-3) கற்பகதரு-கற்பக மரம். தேவர்கள் பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றியது. இது விருக்ஷ

உருப் போன்றது. எட்டுக்கிளைகளையுடையது. இது விரும்பினதைத் தரும் ஆற்றல் உடையது. இதில் படரும் கொடி காமவல்லி.

(அடி-4) சொருணம் - தங்கம். மனக்கமலம் - உருவம். ஒளி- ஒளிபோன்றிருப்பவள்.

தேவி ஒளிமண்டலத்தில் வசிப்பவள் என்ற கருத்தை உட்கொண்டு 'ஒளியே' என்று ஆசிரியர் விளிக்கின்றார் போலும். ஒளி மண்டலம் அக்கினி மண்டலமாகும். அக்கினி மண்டலம் மூலாதார சுவாதிஷ்டான சக்கிரங்கள் அடங்கியதாகும். அதனுள் வசிப்பவள் தேவி. (லலிதா.)

38. நடையெழில் கண்டுஅனம் நின்று தொழுங்குயில்
கொட்டுக சப்பாணி
நளின மடந்தை வணங்கு பசும்பிடி
கொட்டுக சப்பாணி
வடவரை வந்து வளர்ந்த சவுந்தரி
கொட்டுக சப்பாணி
மரகதம் வென்று விளங்கு திருந்தொளி
கொட்டுக சப்பாணி
இடைதுவ ளுஞ்சிறு மயிலென நின்றவள்
கொட்டுக சப்பாணி
இலகு பெருங்கலை இணைகொள் கருங்கணி
கொட்டுக சப்பாணி
குடைநிழ லின்தென் னிலங்கள் புரந்தவள்
கொட்டுக சப்பாணி
குலவு பசும்பொன் னளந்த விளங்கிளி
கொட்டுக சப்பாணி. (9)

(அடி-1) எழில் – அழகு. அனம் - அன்னம். பசும்பிடி - இளமையான பெண் யானை.

(அடி-2) வடவரை - இமயமலை. வந்து – தோன்றி.

(அடி-4) தென்னிலங்கள் - விந்தியமலைக்குத் தெற்கேயுள்ள பிரதேசங்கள். புரந்தவள் - காப்பாற்றியவள்.

39. இணர்விரி பைந்தரு எனவளர் சுந்தரி
கொட்டுக சப்பாணி
இறைவ னிடந்தனில் உறையும் அரும்பொருள்

கொட்டுக சப்பாணி
மணமலி சண்பக மலரணி அம்பிகை
கொட்டுக சப்பாணி
மகிமை திகழ்ந்து தழைந்த பசுங்கொடி
கொட்டுக சப்பாணி
அணிகொள் முகுந்தன திளையள் எனும்பிடி
கொட்டுக சப்பாணி
அகில மகிழ்ந்திட வருசிறு பெண்பிள்ளை
கொட்டுக சப்பாணி
குணநிறை இன்பம் விளைந்த நறுங்கனி
கொட்டுக சப்பாணி
குலவு பசும்பொன் னளந்த விளங்கிளி
கொட்டுக சப்பாணி. (10)

(அடி-1) இணர்-பூங்கொத்து. இறைவன் இடந்தனில் உறையும். சிவபெருமானது இடப்பக்கத்தில் இருக்கும்.

(அடி-2) மணம்மலி - வாசனை நிறைந்த. மகிமை - பெருமை.

(அடி-3) முகுந்தன் - மோட்சத்தையளிப்பவன்; திருமால். அகிலம் மகிழ்ந்திட - எல்லா உலகங்களும் மகிழ்ச்சியடைய.

## 5. முத்தப் பருவம்

40. உய்யும் படிநின் திருவுள்ளத்
தோங்கி எழுந்த கருணையினால்
உலகம் பதினா லயும்படைத்தே
உயிர்கட் கினிய தனுகரணந்
துய்ய புவன போகங்கள்
தோன்ற அமைத்து மாமாயை
தோற்ற வலிமை மெலிவிப்ப
துனது சக்தி எனக்காட்ட
ஐவர் தம்மைப் பெற்றெடுத்த
அணங்கே துவாத சாந்தவெளி
அதனி னிறைந்த பேரொளியே
அமுதே முத்திக் கொருவித்தே
தெய்வ வாசங் கமழ்குமுதச்

செவ்வாய் முத்தம் தருகவே!
செம்பொ னளந்த பெருங்கருணைத்
திருவே முத்தம் தருகவே. (1)

(அடி.1) உய்யும்படி - பிழைக்கும்படி.

உலகம் பதினன்கு —பூலோகம், புவலோகம், சுவலோகம், மகாலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம், அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம்.

(அடி-2) மாமாயை - சுத்தமாயை.

உண்மைக்கு மாறுபட்ட தோற்றத்தைத் தருவது மாயை. என்றும் சேராததைச் சேர்த்து வைப்பது மாயை. எது எப்படி விளங்க வேண்டுமோ அதற்கு மாறுபட விளங்க வைப்பது மாயை. சிறந்த அறிவாளியையும் மயக்கிச் சம்சாரத்தில் சிக்க வைக்கிறது. "ஞானியின் மனத்தையும் வலிவுடன் இழுத்து மோகத்திற்கு வசப்படுத்துகிருள். ஏனெனில் அவள் மாபெரும் சக்திகள் அனைத்தும்படைத்தவள்." (தேவிமகாத்மியம் 1-55) அத்தகைய மாபெரும் மாயையாக இருப்பவள் தேவி. ஐவர் - சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன். தேவி, தனது ஐந்து தொழில் புரியும் சக்தியைஇவர்களுக்குப் பகிர்ந்து அளித்திருக்கிருள். தேவியின் ஆணைப்படி இவர்கள் படைத்தல், காத்தல், ஒடுக்குதல், திரோதானம், அநுக்கிரகம் என்னும் ஐந்து தொழில்களைப் புரிகின்றனர். (லலிதா.)

ஐந்தொழில் விளக்கம் :—புராணத்தில் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்று மூன்றின் விளக்கம் விரிவாகத் தரப்படுகின்றது திரோதானம் ஸம்ஹாரத்திற்குப் பிரம்ம தத்துவத்தில் உலகம் ஒடுங்கும் வகை. அநுக்கிரகம் சிருஷ்டிக்கு முன் பிரம்மத்திலிருந்தும் உலகம் வெளியாகும் முறை. இந்த ஐந்து தொழில்களும் ஒவ்வொரு கணத்திலும் நடைபெற்று வருகின்றன. உற்பத்தியாவதும், இருப்பதும், அழிவதும், மறைவதும், தோன்றுவதும் சங்கிலித் தொடர்போல் எப்போதும் நிகழ்ந்துகொண்டிருக்கும். இந்த ஐந்து தொழில்களும் முழுவதும் நின்று போகும் நிலை மகாப்பிரளயம்.

அந்த மகாப்பிரளயத்தில் தேவி சாட்சிணியாக நிற்பதைத் தேவியின் நாமங்கள் கூறும்.

துவாதசாந்தம் :—உச்சிக்குமேல் பன்னிரண்டு அங்குலத்தில் உள்ளதாகக் கருதப்படும் யோகத் தானம்.

(அடி-4) தெய்வ வாசங்கமழும் - தெய்வமணம் வீசுகின்ற. குமுதச்செவ்வாய் - குமுத மலர் போன்ற சிவந்த வாயால்.

41. வாடிக் கமல மலர்கூம்ப
மலரும் கதிர்வெண் மதிக்கொழுந்தை
மந்தா கினிபாய்ந் திடத்தழைந்து
வளரும் பவளச் சடாடவியில்
சூடிப் பொதுவி னடம்புரியும்
துணைவன் தனக்கோர் துணையாகித்
தொல்லைப் புவனம் படைத்தளிப்பத்
தோற்றும் தூண்டா மணிவிளக்கே
ஆடிப் பரந்து பரந்துபரந்
தகிலம் பிளந்து வானேறி
அல்லும் பகலும் கண்ணுறங்கா
தநேகம் காலம் அரிபிரமர்
தேடக் கிடையாச் சிவானந்தத்
தெளிவே முத்தம் தருகவே
செம்பொன் னளந்த பெருங்கருணைத்
திருவே முத்தம் தருகவே. (2)

(அடி-1) கமலமலர் - தாமரைமலர். கூம்ப - குவிய. மந்தாகினி- தேவலோகத்திலுள்ள கங்கை. சடாடவி- சடையாகிய காட்டில்.

(அடி-2) பொதுவில் - சபையில். தொல்லை-பழமை "தொல்லைக் கணின்றூர் தொடர்பு" (குறள். 806) தூண்டா மணி விளக்கு - நாகரத்னமாகிய மணி விளக்கு.

(அடி-3) அரி - திருமால். பரந்து, பரந்து, பரந்து: அடுக்குத் தொடர்.

(அடி-4) தேடக்கிடையா - தேடியும் கிடைக்காத.

42. மகிழு மலையந் தனிற்றழைந்து
மதுரம் ஒழுகும் செழுந்தமிழை
வளர்க்கும் சங்க மிருந்தோங்கும்
மதுரைக் கரசே மனுநீதி
புகழும் அகிலம் ஒருகுடைக்கீழ்ப்
புரந்து தென்னன் புதல்வியெனப்
புதுமை காட்டி விளையாடல்
புரிந்தே ஆல வாயமர்ந்து
நிகழும் சோம சுந்தரற்கு
நிறைய விருந்து பரிந்தளித்து
நெஞ்சம் பெருகி உருகவுளம்
நின்ற அமுதே பசுங்கிளியே
திகழும் கதிர்வெண் முத்தரும்பும்
செவ்வாய் முத்தம் தருகவே
செம்பொன் அளந்த பெருங்கருணைத்
திருவே முத்தம் தருகவே. (8)

(அடி-1) மதுரம் - இனிமை.

(அடி-2) அகிலம் – உலகம் முழுவதையும். ஒரு குடைக்கீழ் - ஒப்பற்ற வெண்கொற்றக் குடையின் கீழ். புரந்து - காப்பாற்றி. தென்னன்புதல்வி – மலயத்துவச பாண்டியனது பெண்ணான தடாதகைப் பிராட்டி.

(அடி-3) பரிந்து- விரும்பி. அமுதே - அமுதம் போன்றிருப்பவளே.

43. ஒளியே ஒளிசூழ் மணிவிளக்கே
உலகம் பதினு லையும்படைத்த
உமையே இமையோர் மணிமவுலி
உரிஞ்சி இடறிச் சிவந்ததாட்
கிளியே பவள வாயனமே
கிளரும் சோலைக் கருங்குயிலே
கிடக்கு நிரய சாகரத்துக்
கீடாய் விழுந்து முழுகிமெலிந்
தெளியேன் பிறவிக் குழியழுந்தா
தெடுத்தாட் கொள்ளும் பெருங்கருணை
இயல்பா யிருக்கும் பராபரையே
இலகும் அமுதே இன்னமுதின்

தெளிவே தேனே தித்திக்கும்
செவ்வாய் முத்தம் தருகவே
செம்பொன் அளந்த பெருங்கருணைத்
திருவே முத்தம் தருகவே. (4)

(அடி-1) உமா என்னும் 'ஆகார' ஈற்று வடசொல் 'ஐகார' ஈறு பெற்று உமை என்று ஆயிற்று (நன். சூ. 147) பார்வதி குழந்தைப் பருவத்திலேயே தவம் செய்ய லானாள். அவளுடைய தாயான மேனை 'உ' அடி பெண்ணே! 'மா' தவம் செய்ய வேண்டாம் என்று தடுத்தாள். அதுமுதற்கொண்டு பார்வதிக்கு 'உமை' என்ற பெயர் ஏற்பட்டது. (குமார சம்பவம்-முதற் சருக்கம்)

அகார, உகார, மகார வரிசையில் அமைந்தது 'ஓம்' என்ற பிரணவம். 'உமா' என்று உகார மகார அகார வரிசையில் அமைந்தது தேவிப் பிரணவம். தேவிப்பிரணவத்தில் சிவ, பிரும்ம, விஷ்ணுக்களைக் குறிப்பிடுமாறு அமைந்துள்ளது.

யோகிகளின் முதிர்ந்த இச்சாசக்தியை 'உமை' என்பர். விநாயக பீடத்தில் எழுந்தருளியுள்ள தேவி உமை.

மவுலி-கிரீடம்.

(அடி-2) பவளவாய் - உவமைத் தொகை. நிரயம் - நரகம். சாகரம் - கடல்.

(அடி-3) பராபரை - சிவசக்தி.

44. கிளைக்கும் கரும்பின் கணுச்சொரியும்
கிளர்வெண் முத்தும் கருங்கடலிற்
கிடக்கும் சிப்பி ஒளிமுத்தும்
கேழல் மருப்பின் வருமுத்தும்
முளைக்கும் பசிய வேய்முத்தும்
முளரி முத்தும் வலம்புரியின்
முத்தும் செங்நெற் கதிர்முத்து
முத்தம் எனப்பேர் பெறுமேனும்
துளைக்கும் கோக்கப் படும்விலையும்
சொல்லப் படும்நீள் கடைத்தெருவிற்
சொரிந்து கிடக்கப் படுமதனாற்

சொல்லப் படுமோ முத்தநிகர்
திளக்கு மேலாம் சிவானந்தத்
தெளிவே முத்தம் தருகவே
செம்பொன் அளந்த பெருங்கருணைத்
திருவே முத்தம் தருகவே. (5)

(அடி-1) முத்துப்பிறக்கும் இடங்கள் கூறப்படுகின்றன. கேழல் - பன்றி.

(அடி-2) முளரி - தாமரை.

கரும்பு, கடல், சிப்பி, யானை, மூங்கில், தாமரை, சங்கு, செந்நெல் இவற்றிலிருந்து முத்து உண்டாகும் என்பர்.

45. ஆவா வென்று வானவர்கள்
அச்ச மீக்கொண் டபயமிட
அயிரா ணியும்பொன் னிதழ்க்கமல
அங்கை நெரிப்பக் கற்பகப்பூங்
காவா முயிரா வதமுதலெண்
களிறு நடுங்க நெடுங்காலம்
கண்ட முனிவர் கண்முகிழ்ப்பக்
காலத் தீக்கான் றிடுங்குலிசக்
கோவோட் டம்பார்த் திடச்சீற்றங்
கொண்ட மயிடன் கண்பிதுங்கக்
குறைத்துத் தலையை மிதித்திடறிக்
குளிர்பொன் னுலகம் புரந்தளிந்த
தேவே மூவர்ப் பெற்றசிவக்
கொழுந்தே முத்தம் தருகவே
செம்பொன் அளந்த பெருங்கருணைத்
திருவே முத்தம் தருகவே. (6)

(அடி-1) ஆவா - இரக்கக் குறிப்பு: இடைச்சொல்.
"ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தார்-ஒரு சாரார்"
(யாப்பருங்கலக்காரிகை, மேற்கோள், 27)
அந்தோ, அன்னோ, கொல்லோ, ஆ; ஆவா, அ ஆ என்பன இரக்கம் குறித்து வரும்.

(நன். மயிலை. இடைச். சூ—420)
வானவர்கள்-தேவர்கள். மீக்கொண்டு-அதிகமாகக் கொண்டு. அபயமிட—அடைக்கலம் தரும்படி கேட்க. அயிராணி—இந்திராணி.

(அடி-2) அயிராவதம் - இந்திரனது யானை. எண்களிறு எட்டு யானைகள். கண்முகிழ்ப்ப-பயத்தால் கண்களை மூடிக்கொள்ள. காலத்தீ—ஊழித்தீ. குலிசக்கோ-வச்சிராயுதத்தையுடைய இந்திரன்.

(அடி-3) சீற்றம்—கோபம். மயிடன்-மகிஷாசுரன்.

(அடி-4) மூவர்-பிரமன், அரி, அரன்.

46. திங்கட் கொழுந்தணிந் தொளிர்கின்ற செக்கர்த்
திருச்சடா டவிமறைத்துத்
திகழுமணி முடிமீது வெண்ணூர லிழைப்பாகை
செவ்விவாய்ந் திடவணிந்து
பைங்கட் பணிப்பெருங் கங்கணம் விடுத்தொளி
பரந்தமா ணிக்கம்வயிரம்
பசியமர கதம்வைத் திழைத்தபொற் கடகம்
பரித்துத் திருச்செவிதனிற்
பொங்கித் திரட்சிபெறு முத்துக் கடுக்கன்
புனைந்துசா லுவைகள் போர்த்துப்
புலவரென வெளிவந்து நக்கீரர் முன்னின்று
பொருதுபொற் கிழிகொடுத்த
சங்கத் தமிழ்தழைந் திடுநாங்கை வாழ்செல்வி
தருகதிரு வாய்முத்தமே.
தண்பொன் னளந்துவளர் பண்கொண்ட பெண்பிள்ளை
தருகதிரு வாய்முத்தமே.

(அடி-1) திங்கட்கொழுந்து - பிறைச்சந்திரன். செக்கர்-சிவந்த. சடாடவி-சடையாகிய காடு.

(அடி-2) கங்கணம் - ஒருவகை வளை. பொற்கடகம்-பொன்னால் செய்யப்பட்ட வளையல். பரித்து-தரித்துக் கொண்டு.

(அடி-3) முத்துக்கடுக்கன் - முத்துக்களால் செய்யப்பட்ட காதணி.
தருமிக்காகச் சோமசுந்தரக் கடவுள் புலவராக வேடந்தரித்து நக்கீரருடன் வாதாடியதை இச்செய்யுள் குறிப்பிடுகின்றது.

47. புவனகோ டிகண்முன் படைத்தநான் முகனெனப்
பொற்புமிகு சீலநிறையும்
புங்கவன் மதங்கமுனி இந்திரன் திசைதனில்
போந்தியா கம்புரிந்து

சிவனையே டவிழுநறு மலரால் அருச்சனைகள்
செய்தெண்ண நிறைவேற்றிடத்
திகழ்முனிவ ரெண்ணரிய யோகமார்க் கந்தனில்
சிந்தனை செலுத்திநிற்பக்
கவனமேற் கொண்டன்ன பூரணியை யிதயநற்
கமலா சனத்திருத்திக்
காயனலின் வேதவிதி தவறாது வேள்விபுரி
காத்தியா யனமுனிவருந்
தவநிலா வியநாங்கை மாநகர் வாழ்செல்வி
தருகதிரு வாய்முத்தமே
தண்பொன்னளந்து வளர் பண்கொண்ட
பெண்பிள்ளை
தருகதிரு வாய்முத்தமே. (8)

(அடி-1) நான்முகன் - பிரமன். பொற்பு - அழகு. புங்கவன் - சிறந்தவன்.

மதங்க முனிவர்: துந்துபி உடலைத் தூக்கித் தன் மலையில் எறிந்த வாலியை அம்மலையை மிதிக்கின் தலை வெடிக்கச் சாபம் அளித்தவர். பிரியம்வதன் என்கிற காந்தருவனை யானையாகச் சபித்தவர். சூரியனிடமிருந்து இந்திரதநுசு பெற்றுப் பரசு ராமனுக்குக் கொடுத்தவர்.

(அடி-2) மார்க்கம்-வழி.

(அடி-3) அன்னபூரணி:—உணவளிப்பவள் தேவி. ஒரு கையில் அன்னம் நிரம்பிய பாத்திரமும் மற்றொருகையில் அதனை வாரி வழங்கும் அகப்பையும் கொண்டவள். அவள் அளிக்கும் அன்னம் ஊட்டமளிப்பதுடன் ஞானமும் வைராக்கியமும் அளிக்கவல்லது.
அன்னமளிப்பவரின் மனப்பான்மையும்அளிக்கப்படும் அன்னத்துடன் அதனைப் பெறுபவரைச் சாரும். தேவி பேரறிவு வடிவினள். அவள் தரும் உணவு ஞானத்தைத் தரவல்லது. "அந்நபூர்ணே சதாபூர்ணே சங்கரப்ராண வல்லபே ஞான வைராக்கிய ஸித்தியர்த்தம் பிக்ஷாம்தேஹிச பார்வதி" (சங்கரரது அன்ன பூர்ணாஷ்டகம்)

இதய கமலாசனத்திருத்தி -இதயமாகிய தாமரையில் இருத்தி.

காத்தியாயன முனிவர் :—யாக்ஞவற்கியர், வரருசி முனிவர், சுகமுனிவர் கோத்திரத்திலே சோமதத்தருக்கு வசுதத்தையிடத்தில் பிறந்தவர். உபநிடதங்களை நன்கு கற்றவர்.

48. மிகுமின்ப மாப்பெருங் கதைநிறை புராணமும்
மேலான ஆகமமும்நா
விற்றமும் பேறப் படித்துரை விரித்துண்மை
மெய்யென்று நையுமனதின்
நெகுமன்பு மேற்படர நித்தியமை மித்தியமும்
நெறியின்வழு வாதியற்றி
நிறைதிருப் பணிசெய்து மறையவர்கள் தினமும்
நியமம் புரிந்துமுத்தி
புகும்அன் பரைக்காணில் அடிபணிந் தெதிர்நின்று
புதியதண் ணமுதமொழுகும்
புகழ்மொழிக ளாற்செவி நிறைத்துமனை
யுட்கொண்டு
போந்தவர் கருத்தமைவுறத்
தகுமன்ன தானஞ்செய் திருநாங்கை வாழ்செல்வி
தருகதிரு வாய்முத்தமே
தண்பொன் னளந்துவளர் பண்கொண்ட
பெண்பிள்ளை
தருகதிரு வாய்முத்தமே. (9)

(அடி-1) ஆகமம் - சிவ விஷ்ணு இவர்களால் இருடிகள் பொருட்டு அருளிச் செய்யப்பட்ட நூல்கள்.

(அடி-2) நித்ய நைமித்தியம் – தினந்தோறும் செய்யும் பூசையும், விசேட பூசையும் வழுவாது இயற்றி - குறையாமல் செய்து. நியமம்-செய்ய வேண்டிய கடமைகளை.

(அடி-3) போந்தவர் - வந்தவர். கருத்து - எண்ணம்.

49. கவளமத யானையுரி போர்த்தமுக் கட்பிரான்
கயிலையங் கிரிநிகர்ப்பக்
கதிதரு சிவாலயம் அநேகமறை யவர்குழாங்
கணக்கினி லடங்காதுநூல்
துவளுமிடை மாதர்தங் கற்பினுக் குவமையோ
சொல்லரிய தியாகசாலை

சூழுகித்தி யாக்கினி வளர்ந்தேறும் வானம்
சுரந்துமழை பொழியும்விரைசூழ்
குவ்ளையந் தாரணியும் வேளாளர் வாய்மையில்
குன்றூர்கள் நவதானியம்
கொழிக்குமனு வேந்தர்செங் கோலோங்கும் வாழும்
குபேரனள காபுரியெனத்
தவளவொளி மாடநிறை சோழவள நாட்டரசி
தருகதிரு வாய்முத்தமே
தண்பொன் னளந்துவளர் பண்கொண்ட
பெண்பிள்ளை
தருகதிரு வாய்முத்தமே. (10)

(அடி-1) முக்கட்பிரான் - சிவபெருமான். கிரி - மலை. நிகர்ப்ப - ஒப்ப. மறையவர் குழாம் - அந்தணர்கள் கூட்டம்.

(அடி-2) விரை - மணம்.

(அடி-3) குவளையந்தார் - குவளைமலரினுல் தொடுக்கப்பட்ட மாலை. நவதானியம் - ஒன்பது தானியங்கள். அவை :—கோதுமை, நெல், துவரை, பயறு, கடலை, காராமணி, எள், உளுந்து, கொள்.

(அடி-4) தவளம் - வெண்மை.

## 6. வருகைப் பருவம்

50. சில்லரிய பைம்பொற் சிலம்பொலி கலீரெனச்
செய்யகிண் கிணிகிணினெனச்
செம்மணிக் கொலுசுஞ் சதங்கையும் கொஞ்சுகிளி
சிறுமழலை மொழிகலிப்பப்
பல்லவ மருட்டுகின் பஞ்சின்மெல் லடியிணை
படிமிசை பெயர்த்தடியிடப்
பைந்தூவி யன்னக் குழாத்தொடு மடப்பிடி
பணிந்துநடை கற்கவந்து
மெல்லமெல் லத்தொடர வகிலாண்ட புவனத்தின்
மேவிய சராசரங்கள்
மென்குஞ்சி செம்பஞ்சி ஞெண்குழம் பொழுகியிள
வெயில்கொழித் திடநினைந்து

சொல்லரிய பச்சைப் பசுங்கதிர் தழைந்திடு
தோகைமா மயில்வருகவே
தொண்டர்பணி கின்றமணி கண்டரிட நின்றருளிசெய்
சொர்ணநா யகிவருகவே. (1)

(அடி-1) சில்லரி - சில பரல்களையுடைய. பைம்பொன் - பசுமையான பொன்.

(அடி-2) பல்லவம் - தளிர். மருட்டு - ஒத்த. படிமிசை - பூமியில். மிசை - ஏழாம் வேற்றுமையுருபு. பைந்தூவியன்னக்குழாம் - மெல்லிய இறகுகளையுடைய அன்னப் பறவைகளின் கூட்டம். "ஆய்தூவி யனமென" (கலித்—6.) மடப்பிடி - பெண்யானை. "விளையாடுமொர் மடப்பிடியையே" (மீனாட்சி. பி. த-—11) மேவிய-பொருந்திய.

(அடி-4) மணிகண்டர் - சிவபெருமான். இடநின்று - இடப் பக்கம் இருந்து கொண்டு. அர்த்தநாரீசுவரர் என்பதைக் குறிக்கின்றது.

51. தங்கவளை அங்கதம் கணையாழி கோத்துச்
சரப்பளி பதக்கமிலகச்
சந்திரப் பிறையினொடு சூரியப் பிறைமணி
தயங்குசூ ழியம்விளங்க
திங்களணி நுதன்மீது கட்டுபொற் பட்டமும்
சிந்துரப் பொட்டுமுத்துச்
செம்பவள மிடையிடை தொடுத்தணி சுட்டியும்
திகழ்கதிர் விரிப்பநீண்ட
அங்கயற் கண்ணருள் பொழிந்திட புரிமுறுக்
கவிழ்செழுந் தாமரைப்போ
தாமெனத் திருமுக மலர்ந்திட அசைந்தசைந்
தாடுதா டங்கமின்ன
துங்கமணி மேகலை தழைந்தெழில் கொழிக்கவளர்
தோகைமா மயில்வருகவே
தொண்டர்பணி கின்றமணி கண்டரிட நின்றருளி
செய்
சொர்ணநா யகிவருகவே. (2)

(அடி-1) அங்கதம் - தோளணி. சரப்பளி- பொன்னால் செய்யப் பட்ட கழுத்தணி வகை. சந்திரப்பிறை-தலையின்

இடப்பக்கத்தில் மகளிர் அணிந்துகொள்ளும் மணி பதித்த பொன்னுபரணவகை.
சூரியப்பிறை-தலையின் வலப்பக்கத்தில் மகளிர் அணிந்துகொள்ளும் மணிபதித்த பொன்னுபரண வகை. தயங்கு - விளங்குகின்ற.
சூழியம் - உச்சிக்கொண்டையில் அணியும் அணி, "விட்டிலகு சூழியம் விழுங்கு சிறுகொண்டை" (திருவிளை. தடாதகைப். 16.)

(அடி-2) நுதல் - நெற்றி. சுட்டி - நெற்றியணி.

(அடி-3) அங்கயற் கண் - அழகிய மீன் போன்ற கண்ணை யுடையவள். போது - மலர். தாடங்கம் - காதில் அணிந்து கொள்ளும் தோடு.

"கடலில் தோன்றிய விஷத்தைப் பரமசிவன் உண்டும் சாகாமல் இருப்பதன் காரணம் தேவியின் தாடங்கமேயாகும்" என்று ஆதிசங்கரர் ஸௌந்தரிய லஹரியில் கூறியுள்ளார். (சுலோகம்—28.)
மின்ன - பிரகாசிக்க.

(அடி-4) துங்கம் - சிறப்பு. தோகைமாமயில் - தோகைகளை யுடைய சிறந்த மயில் போன்றிருப்பவளே. தொண்டர்-அடியார்கள்.

52. மாயைசூழ் வினையொழித் திடநிறையு முக்குள
மலர்ந்தவெண் காட்டின்மேல்பால்
மார்க்கண்டர் பணிதிருக் கடவூ ரினுக்குநேர்
வடபுறம் காழிநகருக்
கேயுமெதிர் தென்பாற் பகீரதி குதித்திட
இலங்குமா யூரமென்னும்
எழில்நகர்க் கீசான மாகியே புள்ளூரி
னுக்கங்கி திசையிலிலகும்
பாயுமால் விடையண்ணல் பொன்னுக் கொளித்திடும்
பரனோங்கு திருநாங்கையம்
பதிதழைய அமுதமென விருகரை தொறும்பெருக
படர்புனல் வழிந்துபொழிய
தூயகா வேரியுத் தரபாக மேவிவளர்
தோகைமா மயில்வருகவே
தொண்டர்பணி கின்றமணி கண்டரிட
நின்றொளிசெய்
சொர்ணநா யகிவருகவே. (3)

(அடி-1) வினை-தீவினை. வெண்காடு - திருவெண்காடு என்னும் ஊர்.

காசிக்குச் சமமாகச் சொல்லப்படும் தலங்களுள் ஒன்று. வெள்ளை யானை பூசை செய்து பேறுபெற்ற தலம்; சோம, சூரிய, அக்கினி என்னும் முக்குளம் உள்ள தலம்; தேவேந்திரன் வழிபட்ட தலம்.

திருக்கடவூர் :—அட்ட வீரட்டத்தில் ஒன்று. மார்க்கண்டேயருக்காக யமனை உதைத்தருளிய தலம்.குங்குலியக் கலய நாயனாரும், காரிநாயனாரும் வசித்திருந்து முத்திபெற்ற தலம். அபிராமி அந்தாதி பாடிய அபிராம பட்டர் தோன்றிய ஊர்.

காழி :—சீகாழி என்னும் திருப்பதி. திருஞான சம்பந்தர் அவதரித்த திருப்பதி. சீகாழி, பிரமபுரம், தோணிபுரம், வேணுபுரம், சிரபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம் என்னும் 12 திருப்பெயர் களையுடைய தலம்.

(அடி-2) பகீரதி - இங்குக் காவிரியைக் குறிக்கின்றது. ஈசானம் - வடகிழக்கு. புள்ளூர் - சம்பாதி, சடாயு வழிபட்ட வைத்தீசுவரன் கோயில். அங்கிதிசை - தென்கிழக்கு.

(அடி-3) பதி - ஊர். தழைய - செழிக்க.

(அடி-4) தூய - பரிசுத்தமான. உத்தரபாகம் - வடக்குப் பக்கம். மேவி - பொருந்தி.

53. பணவரவல் குலார் மகளிர்தெள் ளமுதொழுகு
பண்கனிந் தேழிசைதனைப்
பாடிமா டகயா ழெடுத்தின் னரம்புளர
பயிற்சியொ டுலாவிநிற்பக்
குணமருவு காமதே னுவுமருப் பொருநான்கு
குலவும்அயி ராவதமும்நீள்
குளிர்நிழலி னினிதிருந் திமையவர்கள் வேந்தின்
குறிப்பின்வழி நிற்பமன்னு
மணமலி பசுந்தேன் சொரிந்துநிமிர் பொங்கர்தொறு
மஞ்சரி மலர்ந்துதிகழ
வாம்நிறை காமர்பூங் கொடிபடர்ந் தெண்ணரிய
வளநலங் காட்டியோங்கத்

துணரிலகு பொற்புமிகு கற்பகச் சோலைவளர்
தோகைமா மயில்வருகவே
தொண்டர்பணி கின்றமணி கண்டரிட
நின்றொளிசெய்
சொர்ணநா யகிவருகவே. (4)

(அடி-1) பணை அரவு-படமெடுத்த பாம்பு. ஏழிசை-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்.
மாடகயாழ்-ஒருவகை வீணை. இடக்கை நால்விரன் மாடகந் தழீஇ (சிலப் வேனிற் காதை)

(அடி-2) அயிராவதம் - இந்திரனது வெள்ளை யானை. இது பாற்கடலில் தோன்றியது. நான்கு கொம்பு களையுடையது. இந்திரன் சூரனுக்குப் பயந்து ஒளித்த போது அவன் பட்டணத்தில் வந்த பானுகோபனுடன் போர் செய்ய, சயந்தனைத் தாங்கிச் சென்றது. சயந்தன் மூர்ச்சிக்கக் கண்டு பானுகோபனைத் தாக்கிக் கொம்புகள் முரிந்து திருவெண்காட்டில் சிவபூசை செய்ய, கொம்புகள் வளர்ந்தன, இந்திரன் கந்தனுடன் போர் செய்து தோற்கக் கண்டு கந்தமூர்த்தியைத் தாங்கத் தவஞ் செய்தது. ஒருமுறை துர்வாசர் சாபத்தால் காட்டானை ஆயிற்று. அட்டதிக்கஜங்களுள் ஒன்றாய்க் கீழ்த் திசையில் இருப்பது.
இமையவர்கள் வேந்தன்-தேவேந்திரன்.

(அடி-3) பொங்கர்-மரக்கொம்பு. மஞ்சரி-பூங்கொத்து

(அடி-4) பொற்பு-அழகு. தொண்டர்-அடியார்கள்.

54. பாயிரும் படலங் கிழித்திலகு கொய்யுளைப்
பச்சைப் பசுங்கலினவாம்
பரித்தேர் கடாவியட ருதயகிரி நின்றெழும்
பருதியங் கடவுட்குநற்
சேயிதழ்க் குமுதமுகை விள்ளவெண் ணிலவுபொழி
திங்கட் கடவுட்குநேர்
செல்லவரி தாகிநெடு மாடமா ளிகைபல
சிறந்திடு தலாற்சுருங்கை
வாயினுட் புகுந்துதற் கந்நலார் முகமதியு
மாணிக்கவொண் குழையுநீள்
வளரொளி விரித்தலின் வெள்கியிட நெடுவீதி
மலிநாங்கை நகர்செழிப்பத்

தூயமர கதவெழில் கொழித்துத் தழைந்துநிறை
தோகைமா மயில்வருகவே
தொண்டர்பணி கின்றமணி கண்டறிட நின்றொளிசெய்
சொர்ணநா யகிவருகவே. (5)

(அடி-1) பாயிருள்-பரவிய இருள். படலம் - கூட்டம். கொய்யுளை-கத்திரிகையால் மட்டம் செய்த பிடரி மயிர். பரி-குதிரை. உதயகிரி – சூரியன் உதிக்கின்ற மலை. பருதியங்கடவுள் – சூரியன்.

(அடி-2) திங்கட் கடவுள் - சந்திரன். சுருங்கை வாயில்-நுழை வாயில். "சுரங்கையே கரந்து பண்ணும் கற்புடை நுழைவா யிற்பேர்" (அகராதி நிகண்டு ஒருசொல் பல பெயர்த்தொகுதி) அந்நலார் - தேவியின் தோழிகள். "குடிலகோ டீரத் திருந்துகொண் டந்நலார் கொய் தளிர்க் கைவருடவும்" (மீ. பி. த. அம்புலிப். 7)

(அடி-3) முகமதி : உருவகம்

55. கன்னற் கமுகின் எழில்காட்டி
கணுவின் முத்தம் சொரியுமணங்
கமழ்பூம் பாளை மடலவிழக்
கவினுஞ் சிறுதேன் காலலைப்பச்
செந்நெல் கதிர்கள் அசைந்தசைந்து
செழும்பொற் கவரி வீசமகிழ்
சிறந்து மருதம் வீற்றிருக்கும்
தெளிநீர்ப் பழனத் தடம்பொய்கை
பொன்னங் கமல மலர்ப்பொகுட்டிற்
புணரும் செங்கால் மடவன்னம்
புலர்ந்து மலர்க்கண் சிவந்தூடப்
புலவி திருத்திக் கலந்தரச
அன்னம் பயிலும் திருநாங்கைக்
கரசே வருக வருகவே
அருள்கூர்ந் திருந்த சொர்ணபுரி
அமுதே வருக வருகவே. (6)

(அடி-1) மருதநிலவளம் கூறப்படும். கமுகு-பாக்குமரம்.

(அடி-2) பழனம்-வயல். பொய்கை-இயற்கையாக உண்டான நீர்நிலை. "பொய்கை வாயிற் புனல்பொரு புதவின்" (பதிற்றுப்.27)

(அடி-3). செங்கால் - சிவந்தகால்களையுடைய. மடஅன்னம்- இளமையான அன்னப்பறவை. மலர்க்கண் - மலர் போன்ற கண். உவமைத்தொகை. புலவிதிருத்தி- ஊடலைத் தீர்த்து.

(அடி-4). அன்னம் பேடையோடு கூடி வாழ்கின்ற நாங்கை மாநகர்.

56. கஞ்சப் பொகுட்டில் வாழ்திருவும்
கலைமா மகளு முடிபணியுங்
கண்ணே யருமா தவர்தேடுங்
கனியே கணக்கி லாதவுயிர்
நெஞ்சத் தறிவை மறைக்குமிருள்
நீங்கத் தோன்றாத் துணையாகி
நின் ற ஞானச்செழுஞ்சுடரே
நினைவின் றெளிவே சிவக்கொழுந்தே
வஞ்சிக் கொடியே மரகதமே
வளரும் கரும்பே மாணிக்க
மணியே சூழும் ஒளிவிளக்கே
மருவும வேத பஞ்சரம்வாழ்
அஞ்சொற் கிளியே அன்னமே
அணங்கே வருக வருகவே
அருள்கூர்ந் திருந்த சொர்ணபுரி
அமுதே வருக வருகவே. (7)

(அடி-1) கஞ்சப் பொகுட்டில்-தாமரைப் பூவின் கொட்டையில். வாழ்திரு - வாழ்கின்ற இலக்குமி. அருமாதவர் தேடும் கனியே - அரிய தவத்தைச் செய்கின்ற முனிவர்கள் தேடும் கனிபோன்றிருப்பவளே.

(அடி-2) தோன்றாத் துணை - கண்ணுக்குத் தோன்றாமல் உதவுவோள்.

"தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே" (தே.)

(அடி-3-4) வேத பஞ்சரம் - வேதமாகிற கூட்டில். 'ஓங்காரம்' என்னும் கூட்டில் தேவி இருப்பதாக ஆதிசங்கரர் கூறுகிறார். "ஹ்ரீம்கார பஞ்சரசுகி" "ஹ்ரீங்காரம் என்ற கூட்டில் வாழும் கிளி" என்று தேவியை லலிதா திரிசதி வருணிக்கிறது. லலிதா சகஸ்ரநாமத்திற்குச் சிறந்ததொரு உரை

எழுதியவர் பாஸ்கரராயர் என்ற தேவி உபாசகர் அவர் ஒரு சமயம் காசியில் ஒரு யாகம் செய்தார். அங்குக் கூடியிருந்த புலவர்கள் பாஸ்கரராயர் மீது பொறாமை கொண்டு பல கேள்விகளைத் தொடுத்தனர். அக்கேள்விகளுக்குத் தங்குதடையின்றி விடை கூறினார். இதை ஞான திருஷ்டியின் மூலம் கவனித்து வந்த "குங்குமானந்தர்" தேவி பாஸ்கரராயரின் தோளில் கிளி வடிவில் அமர்ந்து யோகினிகளின் பெயரைச் சொல்லி வருவதைக் கண்டு தரையில் விழுந்து வணங்கிக் கண்ணீர் மல்க நின்றார். அம்பிகை அடியார்களுக்கு அருள்பாலிப்பவள் என்பதை இவ்வரலாறு தெரிவிக்கிறது.

57. துரியங் கடந்த பரநாதத்
தொளியே யெளியேன் பெரும்பிறவிச்
சுழனீர்க் கடனின் றேறவரும்
துணையே மடமா னிளம்பிணையே
முருகு விரியப் பசுந்தேறல்
முகைவிண் டூற்ற விதழவிழ்க்கு
முளரிப் பொகுட்டில் வீற்றிருக்கும்
முதுமா மறைதேர் சதுமுகனுங்
கரியவிடங் கான்றனற் பிழிவெங்
கால்மூச் செறியும் பாம்பணைமேற்
கமல மலர்க்கண் வளர்காவற்
கடவு ளென்னும் இருவருந்தே
டரிய பொருளே திருநாங்கைக்
கரசே வருக வருகவே
அருள்கூர்ந் திருந்த சொர்ணபுரி
அமுதே வருக வருகவே. (8)

(அடி-1) துரியம் - ஆன்மா உந்திப் பிரதேசத்தில் பிராணனோடு இலயித்து நிற்கத் தன்னையே விஷயீகரிக்கும் நான்காம் ஆன்மநிலை. துரீயம் என்ற வடசொல் எதுகை நோக்கித் துரியம் என்றாயிற்று. துரீய தத்துவம் மனதிற்கும், வாக்கிற்கும் எட்டாத மகிமையோடு கூடியது. தேவர்களால் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் அடையமுடியாததான மகிமையே துரீய தத்துவத்தின் சிறப்பாகும். அப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த துரீய தத்துவத்தையும் கடந்தவள் தேவி என்று இந்நூலாசிரியர் கூறுகின்றார்.

இளம்பிணையே - இளமையையுடைய பெண்மான் போன்றவளே.

(அடி-2) தேறல் - தேன். முளரிப்பொகுட்டு - தாமரை மலரின் கொட்டையில். சதுமுகன் - பிரமன்.

(அடி-3) பாம்பணை - ஆதிசேடனாகிய படுக்கை.

"பாயுநீர் அரங்கந் தன்னுள் பாம்பணைப் பள்ளி கொண்ட" (திவ்ய. முதலாயிரம்)

(அடி-4) இருவரும் தேடரிய பொருள் - சிவபெருமான். இங்குச் சிவபெருமானின் செயலைத் தேவியின் செயலாகக் கூறுகிறார் ஆசிரியர். இவ்வாறு கூறுவது அபேத சம்பந்தம்.

முடிபு :- ஒளியே, துணையே, இளம்பிணையே, தேடரிய பொருளே, நாங்கைக்கரசே, சொர்ணபுரி அமுதே வருக வருக.

58. நாதத் தலத்தில் முளைத்தெழுந்த
நற்பூங் கொடியே கற்பகத்தின்
நறும்பொற் றளிரே மரகதமே
நாதங் கடந்த அநாதிமுததன்
பாதித் தனுவில் வீற்றிருக்கும்
பச்சைக் கிளியே இளமயிலே
பஞ்சாட் சரியே பராபரியே
பரந்து கிடந்த பழவினையால்
ஏதப் படும்பல் லுயிர்க்கெல்லாம்
இரங்கும் பரிபூ ரணமேபே
ரின்பக் கடலே பரஞ்சுடரே
எழுந்து திகழும் சராசரங்கட்
காதித் தனுக்கா ரணமேபெண்
அணங்கே வருக வருகவே
அருள்கூர்ந் திருந்த சொர்ணபுரி
அமுதே வருக வருகவே. (9)

(அடி-1) நாதம் - பத்மராகம் என்னும் சிவப்பு நிற ரத்னத்தின் ஒளியுடன் பீஜகோசங்களுக்கு இடையே உள்ள தையல்போல் வடிவங்கொண்டது. முளைத்து எழுந்த - தோன்றிய. அநாதிமுத்தன் - சிவபெருமான்.

(அடி-2) பாதித்தனுவில் - பாதி உடலில். பராபரி - மேலான வற்றினும் மேலானவள். பழவினை - முன்வினை.

(அடி-3) ஏதப்படும் - துன்பப்படும். சராசரம் - அசையும் பொருள், அசையாப்பொருள். பரஞ்சுடரே - மேலான ஒளி போன்றிருப்பவளே.

(அடி-4) பெண் அணங்கே - பெண் தெய்வமே.

முடிபு :- பூங்கொடியே, தளிரே, மரகதமே, பச்சைக்கிளியே, இளமயிலே, பஞ்சாட்சரியே, பராபரியே, பரிபூரணமே, பெண் அணங்கே, சொர்ணபுரி அமுதே வருக வருகவே.

வேறு

59. அடியர் கவலை ஒழிய அருள்செய் அமுதம் வருக வருகவே
அளவில் பெருமை தழையு மலையின் அரசி வருக வருகவே
நெடிய கமல நயனி வருக நிமலை வருக வருகவே
நினையும் இதய கமல நிறையு நிதியம் வருக வருகவே
வடிவம் எழுத அரிய ஒளியே வருக வருக வருகவே
வளரும் விளரி கனியும் இனிய மதுர வசனி வருகவே
துடைகொ ளிடைமின் வருக வருக சுகிர்தி வருக வருகவே
தொகையில் கருணை பெருகி ஒழுகு சொருணம் வருக வருகவே. (10)

(அடி-1) அடியர் - தொண்டர்கள். கவலை - மனக்கவலை.

(அடி-2) கமல நயனி - தாமரை மலர் போன்ற கண்களை யுடையவள். நிமலை - குற்றமற்றவள். நிதியம் - செல்வம்.

(அடி-3) எழுத அரிய - எழுதுவதற்கு இயலாத. மதுரவசனி - இனிமையான சொற்களைச் சொல்லுகின்றவள்.

(அடி-4) தொகை இல் - அளவு இல்லாத.

முடிபு :- அமுதம், மலையின் அரசி, கமலநயனி, நிமலை, நிதியம், ஒளி, மதுரவசனி, சுகிர்தி, சொர்ணம் வருக வருக.

## 7. அம்புலிப் பருவம்

60. தாரணியின் மீதிலகு வடிவமுத மாதலாற்
தண்ணளி சுரந்திடுதலால்
தங்குபரி பூரணங் திகழ்தலாற் புகழ்தலாற்
சாற்றுநன் மதியுடைமையால்

காரணர் தமக்குநிகர் கண்ணாகி நிற்றலால்
கருதரிய கலைநிறைதலால்
காரிருள் அகற்றலால் ஒருகுலந் தன்னிற்
கவின்பெற உதித்திடுதலால்
சீரணிந் திடுமுடுக் கணநடுவில் வைகியிடு
திங்களங் கடவுளெங்கள்
செல்வக் குமாரிக்கு நிகரொத் திருந்தனை
திருத்தியெழு தரியவரிய
ஆரணப் பொருளான அகிலாண்ட வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே
அன்னமென் நடைகொண்டு பொன்னனளந் தவளுடன்
அம்புலீ யாடவாவே. (1)

(அடி-1) தாரணி – பூமி. உலகனைத்தையும் தாங்குவதால் தாரணி எனப்பட்டாள். தாங்குவதற்கு இன்றி யமையாத பொறுமை, பூமியின் தனிச்சிறப்புப் பெற்ற குணமாய் அமைந்துள்ளது.

''தசரதன் மதலையா வருதும் தாரணி'' (கம்ப. பால. 214), சுரந்திடுதல் - பெருக்கு எடுத்தல். பரிபூரணம் -நிறைவு.

(அடி-2) காரிருள் - அஞ்ஞானமாகிய இருள். கவின்பெற - அழகு பெற.

(அடி-3) உடுக்கணம் - நட்சத்திரக் கூட்டம். வைகி - தங்கி. செல்வக் குமரி - இறைவி.

(அடி-4) ஆரணப் பொருள் - வேதப் பொருள். சந்திரனுக்கும் அம்பிகைக்கும் ஒப்புமை கூறுகின்றார்.

61. உம்பர்தம் பெருமா னுவந்துநின் றனுவதனில்
ஒருகூறு மருவநின்றாய்
உரிமைபெறும் அன்பிற் கலந்தவர் தமக்குநல
லுளமிக மகிழ்ச்சிசெய்தாய்
பம்பியிடு மீனக் கொடிபிடித் தாயுலகு
பரவும்வேந் துரிமைபூண்டாய்
பசிதீர் நல்லமு தளித்துவந் தாய்செழும்
பனிவரையின் மேற்றவழ்ந்தாய்
விம்பமா மதியுனது செயலெலாம் எங்களுடைய
வேதநா யகிசெயலதாய்

மேவியே நிகரொத் திருத்தலால் நண்பனெனு
மேன்மைபெற் றனையாதலால்
அம்புவி நிறைந்திலகு அகிலாண்ட வல்லியுடன்
அம்புலீ யாடவாவே
அன்னமென் னடைகொண்டு பொன்னளந் தவளுடன்
அம்புலீ யாடவாவே. (2)

(அடி-1) உம்பர்தம் பெருமான் - சிவபெருமான். தனு - சரீரம். ஒருகூறு – ஒரு கலையுடைய பிறை. உளம் - உள்ளம்.

(அடி-2) பம்பி - செழித்து. பனிவரை - இமயமலை. மீனக் கொடி - நக்ஷத்திரமாகிய கொடி; மீன் ஆகிய கொடி. பாண்டியர்க்கு உரியது.

(அடி-3) வேதநாயகி - வேதத்தின் தலைவி. மேவியே - பொருந்தியே.

(அடி-4) அம்புவி - அழகிய பூமியில். இலகு – விளங்குகின்ற. இச்செய்யுளில் சாமோபாயம் கூறப்படுகின்றது.

62. எண்ணிலா உயிர்களுக் காதார மாகியே
இடங்கொடுத் திடுமென்றுநீ
இலகியிடு கீற்றிளம் பிறையாகி மேற்றிசையபை
எழில்பெறத் தோற்றியினைய
தெண்ணிலா ஒளிசெய்து விண்ணில்வாழ்ந் தனையெங்கள்
செல்விதிரு நுதலெழிலினைத்
திருடினமை யாலதன் பின்னுநின் கள்ளம்
தினந்தவிர்கி லாய்சிறந்த
பெண்ணின்வாண் முகமேவு செவ்வியுங் கவரவே
பெருகிமுழு மதியதாகிப்
பேராசை கொள்ளநின் பகைவந்து மெள்ளப்
பிடிக்கவர னுதவியிலதால்
அண்ணலோர் பங்கிலுறை அகிலாண்ட வல்லியுடன்
அம்புலீ யாடவாவே
அன்னமென் னடைகொண்டு பொன்னளந் தவளுடன்
அம்புலீ யாடவாவே. (3)

(அடி-1) எண் இலா - கணக்கு இல்லாத,. ஆதாரமாகி - பற்றுக் கோடாகி.

(அடி-2) விண்ணில் - ஆகாயத்தில். நுதல் - நெற்றி.

(அடி-3) வாண்முகம் - ஒளி பொருந்திய முகம். முழுமதி - பூர்ணசந்திரன். நின்பகை - இராகு, கேது.

இவர்கள் பகைவர்களாகக் காரணம்:- பாற்கடல் கடைந்து கிடைத்த அமிர்தத்தைத் திருமால் மோகினி உருக்கொண்டு அசுரர்களுக்கு அளிக்காமல் தேவர்களுக்கே அளித்த.போது இரு அசுரர்கள் தேவ உருக்கொண்டு தேவர்களுடன் இருந்ததைச் சூரியனும், சந்திரனும் மோகினிக்குத் தெரிவிக்க அவர் பரிமாறின சட்டுவத்தால் அடித்தார். அவர்கள் இராகு கேதுக்களாகிச் சூரியன் மீதும் சந்திரன் மீதும் பகை கொண்டனர்.

63. சோதிமர கதமேனி பாசொளி விரிக்குந்
துரைப்பெண் வரைப்பெண்ணிவள்
சூழ்திருவிழிக் கடைகொழித் திடும்பெருங் கருணை
சொல்லியள விடநிறைந்த
வேதநான் கினுமடங் காதிடங் கொண்டதில்
விளைந்தபுகழ் நெடுவெண்ணிலா
விண்முழுவ தும்பரந் தெண்ணில்பல் புவனமும்
விளக்கிநின் னிடமீதிலெட்
பாதிதங் கினத்தைக் கொண்டுவெண் ணிலவுபொழி
பண்புபெற் றனையாதலால்
பகுத்தறி தனக்கென நினக்கொரு சுதந்தரம்
பார்த்திடிற் காண்கிலேம்காண்
ஆதியோர் பங்கிலுறை அகிலாண்ட வல்லியுடன்
அம்புலீ யாடவாவே
அன்னமென் நடைகொண்டு பொன்னளந் தவளுடன்
அம்புலீ யாடவாவே. (4)

(அடி-1) துரைப்பெண் - அரசி.

"மதுரைத் துரைப்பெணுடன்" (மீனுட்சி.பி.த.72.)

(அடி-2) வேதம் நான்கு - ருக், யசுர், சாமம், அதர்வணம். விண் - ஆகாயம்.

(அடி-3) சுதந்தரம் - உரிமை.

(அடி-4) ஆதியோர் பங்கில் - சிவபெருமானது இடப்பக்கத்தில். பிருங்கி முனிவர் மோட்ச காமியாய்ச் சத்தியை வழிபாடு செய்யாமல் சிவமூர்த்தியை மட்டும் வழிபட்டு நீங்குகையில், உமாதேவியார் முனிவரிடம். தமது கூறுகிய உதிர மாம்சங்களை வற்றச் செய்தனர் முனிவர் நடக்க வலியற்றுச் சிவமூர்த்தியை வேண்டச் சிவன் ஒரு கோலுங் காலுந் தந்து அருள் செய்தார். இதனால் தேவி தவம் செய்து, பக்தர் வழிபாடு தனக்கும் உரிமை பெறச் சிவனது உடலில் இடப்பக்கத்தைத் தனக்கு உரிமையாகப் பெற்றாள். உறை - வசிக்கின்ற.

62 63 இச்செய்யுட்களில் பேதோபாயம் கூறப்படுகின்றது.

64. வருநல்லி எமையிலுடல் வெளுத்தனை வளைந்துகூன்
வந்திடந் தேய்ந்தனையிவள்
மரகத மணிக்கொரு மணியெனப் பச்சென
வளர்ந்தன டழைந்தனளுனைப்
பெருகுகய ரோகம் பிடித்திட விருந்தனை
பெருந்திரு யகட்கரசிவள்
பேர்சொல்லி நாலா யிரத்துநா னூற்றின்மேல்
பெருகுநோய் முழுதுமோடும
உரியசோ டசக்கலை வளர்த்தனை யுரைக்கிலிவள்
உரைபெற்ற அறுபத்துநான்
கொண்பொரு ணிறைந்தகலை எங்கணும்
வளர்த்தனள்
உனக்கதியள் என்றுணர்தியால்
அரியதிரு நாங்கைவள ரகிலாண்ட வல்லியுடன்
அம்புலீ யாடவாவே
அன்னமென் நடைகொண்டு பொன்னளந் தவளுடன்
அம்புலீ ஆடவாவே. (5)

(அடி-1) இப்பாடலிலும் சந்திரனுக்கும் இறைவிக்கும் உள்ள வேற்றுமைகளைக் கூறுகின்றார்.

(அடி-2) கயரோகம் - க்ஷயரோகம். சந்திரன் தக்ஷன் பெண்கள் இருபத்து ஏழுபேரை மணந்து அவர்களிடத்து ஒரேவகையான அன்பு வைக்காமல் உரோகிணி என்பவளிடம் மாத்திரம் அதிக அன்பு

காட்டினான். மற்றவர்கள் தக்ஷனிடம் கூற அவன் க்ஷயரோகம் ஏற்படச் சாபமிட்டான். சந்திரன் சாபம் அடைந்து பின்பு சிவனால் கலைகள் வளரவும், நோய் நீங்கவும் அருள் பெற்றான்.

அடி-3) சோடசகலை - பதினாறு கலைகள். அறுபத்து நான்கு ஒண்பொருள் நிறைந்த கலை - அறுபத்து நான்கு கலை வடிவானவள் தேவி.

அறுபத்து நான்கு கலைகளாவன:-அக்கர இலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாஸ்திரம், சோதிடம், தரும சாத்திரம், யோகசாத்திரம், மந்திரசாத்திரம், சகுன சாத்திரம், சிற்பம், வைத்தியம், உருவ சாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுர பாடனம், நாடகம், நிருத்தம், சத்தபிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரீக்ஷை, கனக பரீக்ஷை, இரத பரீக்ஷை, கஜ பரீக்ஷை, அசுவ பரீக்ஷை, இரத்தின பரீக்ஷை, பூ பரீக்ஷை, சங்கிராம இலக்கணம், மல்லயுத்தம், ஆகருஷணம், உச்சாடனம், வித்துவேஷணம், மதனசாத்திரம், மோகனம் வசீகரணம், இரசவாதம், காந்தர்வவாதம், பைபீல வாதம், கௌத்துக வாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிச்யம், இந்திர ஜாலம், மகேந்திர ஜாலம், அக்கினித்தம்பம், ஜலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப் பிரயோகம் (சூனியம் வைத்துக் கொல்லும் வித்தை) முதலியன.

கலைகள் எனத் தந்திரங்களைச் சொல்வதும் உண்டு. ''நித்யாஷோட சிகார்ணவம்'' என்னும் நூலில் பல பெயர்கள் சொல்லப்பட்டுள்ளன. மஹாமாயா, சம்பரம், யோகிநீ, ஜாலசம்பரம், தத்வசம்பரம், பைரவாஷ்டகம், ப்ராம்ஹீ, மாகேசுவரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்திரீ, சாமுண்டா, சிவதூதீ, ப்ரும்மயாமளம், உமாயாமளம், ஸ்கந்த யாமளம், கணேசயாமளம், ஜயத்ரதயாமளம், சந்திரஞானம், வாசுகி, மஹாஸம்மோஹனம், மஹோச்சுஷ்யம், வாதுலம், வாதுலோத்தரம்,

ஹிருத்பேதம், தந்த்ரபேதம், குஹ்யதந்த்ரம், காமிகம், கலாவாதம், கலாசாரம், குப்ஜிகாமதம், தந்த்ரோத்தரம், வீணுதந்த்ரம், த்ரோதலம், த்ரோதலோத்தரம், பஞ்சாமிருதம், ரூபபேதம், பூதோட்டாமரம், குலஸாரம், குலோட்டீசம், குலசூடாமணி, ஸர்வஞ்ஞானுேத்தரம், மகாகாளிமதம், மகாலக்ஷ்மி மதம், ஸித்தயோகிச்வரீமதம், குரூபிகா மதம், தேவரூபிகா மதம், சர்வவீர மதம், விமலா மதம், பூர்வாம்நாயம், பச்சிமாம்நாயம், தக்ஷிணும் நாயம், உத்தராம்நாயம், நிருத்தராம்நாயம் (ஊர்த்வாம்நாயம்) வைசேஷிக தந்திரம், ஞானுர்ணவம், வீராவளி, அருணேசம், மோஹினீசம், விசுத்தேசுவரம். இந்தத் தந்திரங்களைத் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி.

சாம, பேத, தான, தண்டம் ஆகிய நால்வகை உபாயங்களில் இது பேதம் கூறியது.
பேதம் -வேறுபாடு.

65. உமிழ்தமர மறிதிரைக் கடலாடை சூழ்புவியில்
ஒன் றினுக் கொன் றுதவி இவ் .
உலகநடை இயல்பெனக் கலைமாப்
பெருஞ்செல்வர்
ஓதுவது முணர்கிலைகொலோ
குமுதமிதழ் விள்ளவெண் ணிலவுபொழி கின்றநிள்
கூடப் பிறந்ததுகடுங்
கோளரவின் வாயிருந் துனைவிழுங் கிப்பெருங்
கோதென் றுமிழ்ந்திடுதலால்
தமிதமி நினக்குதவி கண்டிலேம் நீஅந்
தரத்திற் றிரிந்திடுதலால்
தரணிமுழு வதும்நின்னை வெண்மதி
யெனச்சொல்லுந்
தகைமையா மகிமைவரவே
அமுதவடி வாயிலகும் அகிலாண்ட வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே
அன்னமென் னடைகொண்டு பொன்னளந் தவளுடன்
அம்புலீ ஆடவாவே. (6)

(அடி-1) கடல் ஆடை - கடல் ஆடையாக. சூழ் - சூழ்ந்த. புவியில் - பூமியில்.

(அடி-2) அரவு - இராகு என்னும் பாம்பு. கோது - சக்கை.

(அடி-3) தமிதமி - மிகத் தனிமை. அந்தரம் - ஆகாயம். தரணி - பூமி. மகிமை - சிறப்பு.

(அடி-4) இலகும் - விளங்கும். தமரம் - ஓசை.

66. கடிமுகை அவிழ்ந்துசெந் தேனொழுகு கற்பகக்
காவுமிமை யவர்குழாமும்
காமதே னுவுமலர்க் கண்ணேக்கு மேவல்
கடைப்பிடித் தாற்றிநிற்ப
வடிபசும் பொன்னுலகம் வாழ்வுதர வோசது
மறைக்கடவுள் பதவிதரவோ
வைகுந்த நாடுதர வோபிறிதோ வறிகிலேம்
மண்ணெலாம் வாரியுண்ட
நெடியவன் முதற்றேவர் குறுகிநிற்க வும்நோக்கி
நின்னைவா வென்றழைத்தால்
நீயிழைத் திடும்அருந் தவம்அம்ம என்கொலோ
நித்தமும் கைத்தலமெடுத்
தடிதொழ எமைப்பணிகொள் அகிலாண்ட வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே
அன்னமென் னடைகொண்டு பொன்னளந் தவளுடன்
அம்புலீ ஆடவாவே. (7)

(அடி-1) கடிமுகை - நறுமணத்தையுடைய அரும்பு. "கடிசுனைக் கவினிய காந்தள்" (கலித். 45) கற்பகக்கா - கற்பகச் சோலை. இமையவர் குழாமும்- தேவர்கள் கூட்டமும். காமதேனு - அமிர்த மதன' காலத்தில் தோன்றிய பசு. இது வேண்டியவற்றைக் கொடுக்கும் ஆற்றல் உடையது.

(அடி-2) வைகுந்தம் - வைகுண்டம். இந்த உலகத்தின் சிறப்புக்களைத் தேவர்களாலும் கூற முடியாது.

(அடி-3) நெடியவன் - திருமால். நித்தமும் - தினந்தோறும்.

(அடி-4) எமை - எம்மை. பணிகொள் - ஏவல் கொள்கின்ற. 65, 66 இச்செய்யுட்களில் தானோபாயம் கூறப்படும்.

67. திங்கள் வாராயென் றழைத்துநீ தாழ்த்ததேன்
செப்புமின் என்றுகோபம்
செனித்திடு முனேடிநின் றிருமுகத் திலகிவளர்
செவ்விக் குடைந்தொதுங்கி

இங்குவர வெட்கினன் போலுமென் றிவ்வா
றெடுத்தனே கங்கள்காட்டி
எங்கள்பெரு மாட்டியைப் பாராட் டி வைத்தே
இருந்தனமே லுய்வதிலைகாண்
பொங்குகடல் முழுதும் வெதும்பியிடில் வேறுமோர்
புனறெளித் தாற்றவுண்டோ
புல்லறிவு ஒழிந்துநீ நல்லறிவு பெறுதியேல்
புகலரிய சகலகலையா
றங்கமறை தெரிவரிய அகிலாண்ட வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே
அன்னமென் னடைகொண்டு பொன்னளந் தவளுடன்
அம்புலீ ஆடவாவே. (8)

(அடி-1) வாராய் - வருவாயாக. தாழ்த்தது ஏன் - காலம் தாமதித்தது என்ன காரணம். செப்பு – சொல். செப்பு: திசைச்சொல். செனித்திடுமுன் - உண்டாகு முன்.

(அடி-2) வெதும்புதல் - கோபித்தல். புகல் அரிய - சொல்லு வதற்கு அருமையான.

(அடி-3) ஆறங்கங்களாவன :-சிக்ஷை, வியாகரணம்,நிருத்தம், சந்தசு, சோதிடம், கல்பம்.

சிக்ஷை என்பது பாணினியால் இயற்றப்பட்டது. இதில் வேதசப்தங்களுக்கு அக்ஷரத்தானம், உதாத்த அநுதாத்த ஸ்வரித ஞானங்கள் சொல்லப்படு கின்றன.

வியாகரணம்: இதற்கு ஆசிரியர் பாணினி. காத்யாயனரும், பதஞ்சலியும் வியாக்யானம் செய்திருக்கின்றனர். இதில் வேதசப்தங்களின் பிரகிருதி, பிரத்யக்ஞானம் விரிவாகக் கூறப்பட்டி ருக்கிறது.

நிருத்தம் ;—இதற்கு ஆசிரியர் யாஸ்கமகரிஷி. இதில் வேத மந்திரங்களின் பயனைத் தெளிவாக்கும் வகை, அப்பிரசித்தபதங்களின் அர்த்தங்கள் போதிக்கப் படும். பின்னும் வேத சப்த நிகண்டும் இதில் உண்டு. சாகபூரணி நிருத்தமும் உண்டு. இது பதகாண்டம், அர்த்தகாண்டம் என இரண்டு வகை.

சந்தசு :-இதற்கு ஆசிரியர் பிங்கள முனிவர். இதில் வேதத்தில் கூறப்பட்ட காயத்ரி முதலியவற்றின் சந்தங்களின் ஞானம் கூறப்படும்.

சோதிடம் :-இதற்கு ஆசிரியர்கள் ஆதித்யாதியர். இதில் வைதிக கர்மங்களின் தொடக்கத்திற்குக் கால ஞானமும் அதன் பலனும் கூறப்படுகின்றன.

கல்பம் :-இதற்கு ஆசிரியர்கள் ஆச்வலாயனர், காத்யாயனர், ஆபஸ்தம்பர், போதாயனர், வைகானஸர், த்ராஹ்யாயனர், பாரத்வாஜர், சத்யாஷாடர், ஹிரண்யகேசி முதலியவர்கள். இது யக்ஞகர்மங்களை அநுட்டிக்கும் விதத்தைப் போதிக்கும்.

68. பெருமைபெறு பேரன்பு சூழ்மூவர் பாடலும்
பெருகுநால் வேதஒலியும்
பிரியாது பண்காட்டு வெண்காட்டில் மேவிவளர்
பெரியநா யகியென்றுசீர்
கருதரிய ஆனந்த நிறைவா யிருந்தருள்
கனிந்தொழுகு மேனிகாட்டிக்
கண்ணகன் றிடுஞால முழுவதும் அளந்திடுங்
கடல்வண்ணன் மார்பில்வளர்செந்
திருமருவு செம்பதும வாவியும் சோலையும்
திகழ்காத் தியாயனரிருப்பும்
செம்பதரை யன்ற னிருப்புமெ ஞன்கையும்
செய்யபட் டிடும்வாட்கையும்
அருமை வருபிறந் தகமென மகிழ்ந்தவளுடன்
அம்புலீ ஆடவாவே
அன்னமென் னடைகொண்டு பொன்னளந் தவளுடன்
அம்புலீ ஆடவாவே. (9)

(அடி-1) மூவர் பாடல் - திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் இவர்களால் பாடப் பெற்ற பாடல்கள்.

(அடி-2) ஆனந்த நிறைவாயிருந்து - ஆனந்த மயமாய் இருந்து. மேனி - உருவம். ஞாலம் - உலகம். கடல் வண்ணன் - கடல் போன்ற நீல நிறத்தையுடைய திருமால்.

(அடி-3) செந்திரு - இலக்குமி. காத்தியாயனர் - யாக்ஞவல் கியருக்கு ஒரு பெயர் என்றும் கூறுவர். இவரால் செய்யப்பட்ட நூல் காத்தியாயன க்ருஹ்ய சூத்திரம்.

69. நிசம்நி சங்குரு மனைதொ டும்பவ
நெடிதகன் றிடும்வருகவே
நிகழ்த ருங்குறு முயல கன்பிணி
நினைவிடும் விடும்வருகவே
வசைசொ லும்படி வளர்ந லங்குறை
வதுவொழிந் திடும்வருகவே
மகித லமிர வலனெ னுஞ்சிறு
மையுமறைந் திடும்வருகவே
தசைதினும் கொடிய அரவும் வெம்பகை
தவிரும் அம்புலீவருகவே
தலைமை கொண்டிடு பெருவ ரம்பல
தருவளம் புலீவருகவே
திசைப ரந்திடு மிசைப ரந்தொளி
திகழ்வையம் புலீவருகவே
செகத லம்புகழ் சொர்ண சுந்தரி
திருமுகம் பெறவருகவே. (10)

(அடி-1) நிசம்நிசம் - உண்மை, உண்மை, குரு - வியாழ பகவான். மனை - மனைவியாகிய தாரை. பவம் - பாவம். முயலகன் - தாருகாவனத்து இருடிகள் சிவபெருமானைக் கொல்ல ஆபிசார யாகம் செய்ய அதில் எழுந்தவன். இவன் சிவபெருமானிடம் தன் உக்கிர உருவத்துடன் வரச் சிவபெருமான் இவனை முதுகில் ஊன்றி மிதித்து இடுப்பை ஒடித்தார்.

(அடி-2) மகிதலம் - பூமி.

(அடி-3) கொடிய அரவு - கொடுமையைச் செய்யும் பாம்பு. வெம்பகை - கொடிய பகை.

(அடி-4) இசை - புகழ். செகதலம் - பூமி. திருமுகம் - அருள்.

## 8. அம்மானைப் பருவம்

70. சோதிச் செழுங்கற்றை நிலவுபொழி நித்திலச்
சூழ்ந்த அம் மனையும்வாய்ந்த
தூயசெம் பவளம் குயிற்றும்அம் மனையுநின்
சுந்தரக் கையிலேந்தித்
தாதிக் கணஞ்சூழ்ந் திருப்ப நடுமையந்
தனிப்போந் திருந்தெடுத்துத்

தகைமைபெற நீயாடு மகிமை யுணரிற்செழுந்
தமிழ்நாங்கை நகரில்வாய்ந்தே
ஏதப்படாதநல் லெள்ளுக்குள் எண்ணெய்போல்
எங்கும் நிறைந்திருந்தே
எவ்வுலகும் உய்யவருள் செய்யும் பெருங்கருணை
இலகநீ ஆட்டிவைப்ப
ஆதித்தன் வெண்மதியு மாடுமெழில் காட்டிவரும்
அம்மானை ஆடியருளே
அடியவர்தம் மனதுருக அருள்பெருகு சொருணபுரி
அம்மானை ஆடியருளே. (1)

(அடி-1) சோதி - ஒளி. நித்திலம் - முத்து. குயிற்றும்- பதித்த. சுந்தரக்கையில் - அழகிய கைகளில்.

(அடி-2) தாதிக்கணம் - தொண்டு செய்கின்றவர்களின் கூட்டம். தகைமை-அழகு. "ஆடுவா டகைமையின்" (பரிபா: 21, 20)

(அடி-3) ஏதப்படாத - குற்றமில்லாத. உய்ய - ஜீவிக்கும்படி.

(அடி-4) ஆதித்தன் - சூரியன்.

71\. வண்டற் படிந்திலகு காவேரி நதிக்கரை
மணற்புழுதி பாய்ந்தளைந்து
மருவுபெரு வீடுதரும் அன்னைநீ திருவுள
மகிழ்ந்துசிறு வீடுகட்டி
எண்டிக் கினும்பவள முத்துவயி டூரியம்
எடுத்துப் பரப்பியொளிசூழ்ந்
திலகுமா ணிக்கநன் மணிவிளக் கேற்றிமுத்
தெழின்மணற் சோறமைத்தே
கண்டற் புதுப்பூஞ் செழுஞ்சோற்றி னெடுசெய்ய
கமலவள் ளத்திலிட்டுக்
கண்ணுன தாதிய ருடன்மரப் பாவைக்
கருத்தியே நாங் கைநகர்சூழ்ந்
தண்டப் பழங்கலம் அடுக்கிவிளை யாடுகிளி
அம்மானை ஆடியருளே
அடியவர்தம் மனதுருக அருள்பெருகு சொருணபுரி
அம்மானை ஆடியருளே. (2)

(அடி-1) பெரு வீடு – மோட்சம்.

(அடி-2) எண்டிக்கினும் - எட்டுத் திசைகளிலும்.

(அடி-3) கமல வள்ளம் - தாமரையாகிய கிண்ணம்.

(அடி-4) கலம் – பாத்திரம். கிளி - கிளி போன்ற சொற்களை யுடையவள். "கிளியே கிளைஞர்" (அபிராமி அந்தாதி, 16.) தேவியை வழிபடுகிறவர்களின் இதயமாகிய கூட்டில் வாழ்வதால் அவள் கிளி எனப்பட்டாள்.

72. வட்டமதி முகமீது குறுவெயர் துளித்தாட
வளர்முத்து வாளியாட
மகரகுண் டலமிலகு பருதிமண் டலமென்ன
வள்ளைவார் காதிலாட
நெட்டிதழ்க் குமுதமலர் செவ்வாயி னகைவெண்
நிலாவுதித் தாடவொளிரும்
நெற்றியிற் கட்டுபொற் பட்டமொடு பத்திநிறை
நித்திலச் சுட்டியாடக்
கட்டழகு திகழுமோ கனமாலை யாடவிரு
கைவளை கலின்கலினெனக்
கல்லிழைத் திடுகடகம் ஆடமெல் விரலிலிடு
கணையாழி ஒளிசெய்தாட
அட்டிகை அசைந்தாட அம்பொன்மணி முடியாட
அம்மானை ஆடியருளே
அடியவர்தம் மனதுருக அருள்பெருக சொருணபுரி
அம்மானை ஆடியருளே. (3)

(அடி-1) மதி முகம் – சந்திரனைப் போன்ற முகம்.
பருதிமண்டலம் – சூரிய மண்டலம்.

(அடி-2) நெட்டிதழ் - நீண்ட இதழ்களையுடைய. குமுதமலர் – ஆம்பல் மலர். நித்திலச்சுட்டி - முத்துக்களால் செய்யப்பட்ட ஆபரண வகை.

(அடி-3) கடகம் - கங்கணம். "கடகம் செறித்த கையை." (மணி. 6. 114). கணையாழி - மோதிரம்.

(அடி 4) அட்டிகை - கழுத்தணிவகை.

73. பிள்ளைச் சுரும்பின முரன்றூதி யாடியிசை
பெருகுசெவ் வழியெடுத்துப்
பின்னற் கருங்குழற் காட்டு நாண்மலரிற்
பெருந்தேன் சுரந்துபின்னும்
கொள்ளைக் குவந்துமேற் கூட்டமிடு வதுபோற்

குழாங்கொண் டிரைந்தெழும்பக்
குலவியிடு சிந்துரப் பொட்டிட்ட சிறுநுதற
குறுவியர் துளித்தரும்ப
துள்ளிப் பெருங்கருணை வெள்ளத்தின் விளையாடு
துணைவிழிக் கயல்பாயநின்
சுந்தரத் திரு முகம் மலர்ந்து மேனோக்கி
தூயவா னவரருந்த
அள்ளித் திரட்டிடு மென்னவொளி மணிமுத்தின்
அம்மானை ஆடியருளே
அடியவர்தம் மனதுருக அருள்பெருகு சொருணபுரி
அம்மானை ஆடியருளே. (4)

(அடி-1) சுரும்பு - வண்டு. முரன்று - ஒலித்து. செவ்வழி - ஒருவகைப்பண். கருங்குழற்காடு - கரிய கூந்தலாகிய காட்டில். நாண்மலர் - அன்றலர்ந்த பூ. சுரந்து - பெருக்கெடுத்து.

(அடி-2) நுதல் - நெற்றி. குறுவியர் - சிறிதாகத் தோன்றும் வியர்வை.

(அடி-3) விழிக்கயல் - விழியாகிய மீன்; உருவகம். சுந்தரம்- அழகு. தூயவானவர் - சிறந்த தேவர்கள்.

(அடி-4) முத்தின் அம்மானை – முத்தினால் செய்யப்பட்ட அம்மானை.

74. பொட்டிட் சிறுநுதற் பாங்கியரின் முளரிப்
பொகுட்டிலுறை திருமகள்செழும்
பொன்னிழைத் தொளிமணி குயிற்றிநின் கையினிற்
போந்தாடும் அம்மனை தனில்
எட்டிப் பிடித்திட அதைப்பார்த்துக் கொண்டிருந்த
சேடியர்கை புடைத்தெழுந்து
நகைசெய் யவும்நின் கனிவா யினுஞ்சிறி
திலங்குகுறு நகையரும்பக்
கட்டிட்ட செஞ்சடைக் காட்டெம் பிரான்முதற்
கடவுளர்தம் வயிறுநிறையக்
கணக்கில்பல் லாயிரத் தண்டகோ டிகளுண்டு
களைதீரவென் சொல்லுகேன்
அட்டிட்டு மிருநாழி நெல்வளர வளரம்மை

அம்மானை ஆடியருளே
அடியவர்தம் மனதுருக அருள்பெருகு சொருணபுரி
அம்மானை ஆடியருளே. (5)

(அடி-1) பாங்கியர் - தோழியர். முளரி - தாமரை. குயிற்றி - பதித்து.

(அடி-2) சேடியர் - தோழியர். குறுநகை-புன்சிரிப்பு.

(அடி-3) செஞ்சடைக்காடு - சிவந்த சடையாகிய காடு. களைதீர - களைப்புத் தீர.

(அடி-4) அட்டு - சமைத்து. இருநாழி நெல்: காஞ்சிபுரத்தில் இறைவன் அருளிய இருநாழிகை நெற்கொண்டு முப்பத்திரண்டு அறங்களையும் அம்பிகை வளர்த்தாள் என்பது புராண வரலாறு.

''ஐயன் அளந்த படியிரு நாழி கொண்டு ஆண்ட மெல்லாம் உய்ய அறம் செய்யும் உன்னையும்'' (அபிராமி அந்தாதி, 57.)

75. கங்குலி னிருண்டுபொற் சேட்டுநறு மணம்வீசு
கற்பகத் தெரியல்வேய்ந்த
கற்றைவார் கூந்தலயி ராணியும் பகர்தேவ
கன்னியரு முகையவிழ்ந்த
பங்கயத் திருமா ளிகைக்குளினி துறைகின்ற
பாமகளும் எழில்பெறுதிருப்
பாற்கடல் வயிற்றிற் பிறந்தவளும் இவர்முதற்
பாங்கியர்கள் சூழ்ந்துநிற்கச்
செங்கைத் தலத்தினுல் வாரிவளர் மண்ணுண்ட
செம்பவள வாய்சுவைத்துத்
திரட்டியிடும் வெண்ணெய் யென்றெண்ணி வைகுந்தத்
திருந்தவன் எழுந்துபார்க்க
அங்கயற் கண்ணமுதே பொங்குவன முத்திலகு
அம்மானை ஆடியருளே
அடிய்வர்தம் மனதுருக அருள்பெருகு சொருணபுரி
அம்மானை ஆடியருளே. (6)

அடி-1) கங்குல் - இரவு. தெரியல் - மாலை. கற்றை - திரளான. அயிராணி - இந்திரனுடைய மனைவி.

(அடி-2) பங்கயத் திருமாளிகை - தாமரையாகிய வீட்டினுள். பாமகள் - கலைமகள். திருப்பாற்கடல் வயிற்றில் பிறந்தவள் - இலக்குமி.

(அடி-3) செம்பவளவாய் - சிவந்த பவழம் போன்ற வாய்.

(அடி-4) அங்கயற்கண் அமுது - மீனாட்சி.

76. பாணிக்குள் மழுவேந்தும் ஐயர் திரு விளையாடல்
பாலித் தொளித்திருக்கப்
பார்த்து முகம்வேர்த்துப் பெயர்த்தடி எடுப்பவிரு
பாத மிகவுந்துவண்டு
நாணித் தளர்ந்துவரு நடைகண்டு மதமொழுகு
நால்வாய்த் தடக்கையோங்கு
நற்குஞ் சரத்திரு முகப்பிள்ளை கைகாட்ட
நன்முறுவல் உள்ளடக்கி
வாணிக் குயிற்கிறைவ னாகிவளர் குரவனென
மறையோதும் வாய்மலர்ந்து
மதுரத் தமிழ்பாடி எதிர்நின்ற சுந்தரர்
மகிழ்ச்சிபெற வாரிவாரி
ஆணிப் பசும்பொ னிடுமங்கைத் தலத்தினால்
அம்மானை ஆடியருளே
அடியவர்தம் மனதுருக அருள்பெருகு சொருணபுரி
அம்மானை ஆடியருளே. (7)

(அடி-1) பாணி - கை. மழுஏந்தும் ஐயர் - மழு என்னும் ஆயுதத்தைக் கையில் தரித்திருக்கும் சிவபெருமான். முகம்வேர்த்து - முகம் வியர்த்து. இருபாதம் - இரண்டு கால்களும்.

(அடி-2) மதம் ஒழுகும் - மதசலம் பெருகும். நால்வாய் — யானை. குஞ்சரத்திருமுகப் பிள்ளை - விநாயகர். வாணிக்குயில் - கலைமகள்.

(அடி-3) மதுரம் - இனிமை.

(அடி-4) ஆணிப்பசும்பொன் - மாற்று உயர்ந்த பொன். ''ஆணிப் பொன்னால் செய்த........தொட்டில்'' (திவ். பெரியாழ். 1, 3-1) அம்கை-அங்கை.

77. சொரியமு தந்திக ழிசைபயி லுங்குயில்
ஆடுக அம்மனையே
சுருதி பயின்றிடு பருவ விளங்கிளி
ஆடுக அம்மனையே

பரிவுறு சிந்தையி லினிதுறை அம்பிகை
ஆடுக அம்மனையே
படிமுழு துய்ந்திட வருசிறு பெண்பிள்ளை
ஆடுக அம்மனையே
மருவி வளர்ந்திடு மகிமை நிறைந்தவள்
ஆடுக அம்மனையே
மதுரம் விளைந்திடு மதுவொழு குங்கனி
ஆடுக அம்மனையே
அரிபிர மன்பணி பரிபுர சுந்தரி
ஆடுக அம்மனையே
அருமை புரிந்திடு சொருணம் அளந்தவள்
ஆடுக அம்மனையே. (8)

(அடி-1) சுருதி - வேதம்.
(அடி-2) பரிவு உறு - அன்பு பொருந்திய (பக்தி நிறைந்த)
(அடி-3) படி - பூமியிலுள்ளோர்.
(அடி-4) பரிபுரம் - சிலம்பு.

78. கதிதரு மம்புய சரணி சுந்தரி
ஆடுக அம்மனையே
கருதெழில் பொங்குபொன் மலைவள ருங்கொடி
ஆடுக அம்மனையே
எதிர்பொரு வெஞ்சின மயிடனை வென்றவள்
ஆடுக அம்மனையே
இறைவ னிடந்தனில் இலகு பசும்பிடி
ஆடுக அம்மனையே
துதிசெய் தெழுந்திமை யவர்பணி யும்பரை
ஆடுக அம்மனையே
துயர மொழிந்தக மகிழ்பெற வந்தவள்
ஆடுக அம்மனையே
அதிக சவுந்தரி சதுரி நிரந்தரி
ஆடுக அம்மனையே
அருமை புரிந்துயர் சொருணம் அளந்தவள்
ஆடுக அம்மனையே. (9)

(அடி-1) அம்புயம் - தாமரை. சரணி - கால்களையுடையவள்.
(அடி-2) மயிடன் - மகிஷாசுரன். இறைவன் இடந்தனில் - பரமசிவனது இடப்பக்கத்தில். இலகு - விளங்குகின்ற. பசும்பிடி - இளமையான பெண்யானை.

(அடி-3) இமையவர் – தேவர்கள்.

(அடி-4) சவுந்தரி – அழகினையுடையவள். நிரந்தரி - பிறப்பு இறப்பு இன்றிச் சாசுவதமாக இருப்பவள். அம்மனை - "அம்மனை யென்ப தம்மை ஆடுமம் மானைக்கும் பேர்" (அகராதி நிகண்டு, 119)

79. திகழ்கொடி வென்று துவண்டிடு மின்னிடை
அம்மனை ஆடுகவே
திருமகள் வந்து பணிந்திடு நன்மணி
அம்மனை ஆடுகவே
நகுமெழில் பொங்கி வழிந்திடும் ஒண்ணுதல்
அம்மனை ஆடுகவே
நளின மிருந்து விளங்கிடு தண்மது
அம்மனை ஆடுகவே
மகிதலம் எங்கும் நிறைந்திடு மின்னமு
தம்மனை ஆடுகவே
மருவிய இன்பம் விளைந்திடு சின்மயி
அம்மனை ஆடுகவே
அகிலம் ஒருங்கு புரந்திடு பெண்ணமு
தம்மனை ஆடுகவே
அரிய பசும்பொன் னளந்திடு கண்மணி
அம்மனை ஆடுகவே. (10)

(அடி-1) திருமகள் - இலக்குமி. நன்மணி - நல்ல மணிகளால் செய்யப்பட்ட.

(அடி-2) எழில் - அழகு. ஒண்ணுதல் –ஒளிபொருந்திய நெற்றி. நளினம் - தாமரை.

(அடி-3) மகிதலம் - பூமி. சின்மயி - ஞான உருவமானவள். சித் – பேரறிவு. ஒப்பற்ற பேரறிவாக இருப்பவள் தேவி.

(அடி-4) புரந்திடும் - காப்பாற்றிடும்..

## 9. நீராடற் பருவம்

80. வள்ளிதழ்க் குமுதநாண் மலர்மலர்ந் தென்னநின்
மணிவாயி னொளிவெளிறவால்
வளையினொடு சூல்வளை ஒலித்திடக் கழுநீர்
மலர்ந்தெனக் கண்சிவப்ப

புள்ளிரைத் தலம்வரப் பொங்கிப் பரந்தலை
புரட்டிச் சுழித்தெழுந்து
புதுநறுஞ் சுதைசெய் மதகெங் கணுஞ்சாலப்
புகுந்துகால் வாயிலோடி
அள்ளிலைத் தேமா நறுங்கனி பலாச்சுளை
அரம்பையங் கனியூற்றுதேன்
ஆறுபா யப்புதுப் புனல்பெருகு காவிரியின்
அணிநெடுங் கரைகடோறும்
வெள்ளிதழ் விரித்திலகு மிளமரக் காநிழல்செய்
வெள்ளநீ ராடியருளே
வெள்ளைமால் விடையேறு வள்ளல்பா
லுறைசொருணம்
வெள்ளைநீ ராடியருளே. (1)

(அடி-1) கழுநீர்மலர் - செங்குவளைமலர். ''கழுநீர் மாலை... அணிந்தும்'' (திருவாசகம், 2, 113) வால்–வெண்மை.

(அடி-2) சுதை செய் மதகு - சுண்ணாம்பினால் கட்டப்பட்ட மதகு. சால - மிக. கால்வாயில் - வாய்க்காலில்.

(அடி-3) தேமாநறுங்கனி-இனிய மாம்பழம். அரம்பையங்கனி- வாழைப்பழம். அணி - அழகிய.

(அடி-4) இளமரக்கா - சோலை. மால்விடை - பெரிய இடப வாகனம்.

81. கண்சிறு கருங்கய லெனக்கயல் தொடர்ந்திடக்
கால்கண் டிளஞ்சினவரால
கணமோடி வரநினது புறவடியின் எழில்கண்டு
கமடமேக் குற்றுநிற்ப
ஒண்சிறு முகச்சங்கு பொங்குமங் கலநாண்
உறுங்கழுத் தினைநோக்கிவந்
துள்ளம் புழுங்கிய யோலமிட் டிரையநின்
ஞெளிமுழுந் தாளிணைப்பார்த்
தெண்சிறு கிடாதெண்ணி யெண்ணி வேயலவன்திரிய
இலகுசெந் தேன்பெருக்கா
றெடுத்து வருவதுபோற் பரந்துவரு காவிரியின்
இருகரை தொறுங்கொழித்த
வெண்சிறு மணற்குன்றி லினிதுவிளை யாடுகிளி
வெள்ளநீ ராடியருளே

வெள்ளைமால் விடையேறு வள்ளல்பா
லுறைசொருணம்
வெள்ளநீ ராடியருளே. (2)

(அடி-1) கயல் – மீன். வரால் - ஒருவகை மீன். கமடம் - ஆமை. ஏக்குற்று - இந்த அழகு பெறவில்லையே என்று தாழ்ந்து.

(அடி-2) மங்கல நாண் - தாலி. உள்ளம் - மனம். புழுங்கி – வருந்தி.

(அடி-3) அலவன் - நண்டு.

(அடி-4) வெள்ளைமால் விடை ஏறும் வள்ளல் - சிவபெருமான். இப்பாட்டில் நீராடற் பருவத்திற்கு ஏற்பப் பல உறுப்புக்கட்கும் நீர் வாழ்வனவற்றையே உவமை கூறியுள்ள திறம் வியக்கத் தக்கது.

82. தெள்ளுநால் வேதச் சிலம்பொலி யலம்பிடத்
திகழ்நடஞ் செய்யுமுக்கண்
செல்வன் மணவாளத் திருக்கோல மங்களந்
தெரிசனஞ் செயவிழைந்தே
அள்ளியணி நீற்றினொளி வெண்ணிலவு பொழியவுரை
அருமுனி அகத்திய யன்மீண்
டளவில்வள நிறைசைய மால்வரைப் பாங்குசெலு
மவ்வேலை குண்டிகைதனில்
துள்ளுபா கீரதி கருங்கொடி கவிழ்ப்பவான்
தோயமிர்த வருவிபார்மேற்
சூழ்வது நிகர்ப்பஅதி வேகமொடு நறுபசுஞ்
சுண்ணந் திமிர்ந்துபொங்கி
விள்ளுநாண் மலர்கமழ வோடிவரு கின்றபுது
வெள்ளநீ ராடியருளே
வெள்ளைமால் விடையேறும் வள்ளல்பா
லுறைசொருணம்
வெள்ளநீ ராடியருளே. (3)

(அடி-1) தெள்ளு - ஆராய்ந்த. "தெள்ளுங் கழலுக்கே" (திருவாசகம், 10, 19). அலம்பிட - ஒலிக்க.

(அடி-2) நீற்றின்ஒளி - திருநீற்றின் ஒளி. சையமால்வரை - குடகுமலை. குண்டிகை - கமண்டலம்.

(அடி-3) பாகீரதி: இங்குக் காவிரி. நிகர்ப்ப - ஒப்ப. பசுஞ் சுண்ணம் - வாசனைப்பொடி. திமிர்ந்து - பூசி.

(அடி-4) விள்ளு - இதழ்கள் விரிந்த. நாண்மலர் - அன்று அலர்ந்த மலர். கமழ - நறுமணம் வீச.

83. உண்டிடைகொ லிலைகொல் எனத்துவளு நுண்மருங்
குறுகொடிச்சி யரும்வில்லேற்
றுழல்கின்ற கானவரும் வாய்வெரீஇக் கண்சிமிழ்த்
துளநடு நடுங்கிநிற்ப
மண்டிணி கிடந்திடுங் கந்தடுஞ் சீற்றமும்
மதவேழ மாமருப்பும்
வன்றேடு நிமிர்ந்தாடு பைங்கழையி னுடன்மலையில்
வளர்செங் கரும்பின்வாய்த்த
கண்டிரன் முத்தமொடு கோழரைக் குங்குமக்
காழ்படுங் குவடுவாசங்
கமழ்நறுஞ் செஞ்சந் தனத்திரளும் நீள்பெருங்
கரைதொறும் வைத்தரைத்து
வெண்டிரை கொழித்துச் சுழித்தோடி வருபொன்னி
வெள்ளநீ ராடியருளே
வெள்ளைமால் விடையேறும் வள்ளல்பா
லுறைசொருணம்
வெள்ளநீ ராடியருளே. (4)

(அடி-1) இடை - உண்டுகொல். 'கொல்' என்னும் இடைச் சொல் ஐயப்பொருளில் வந்துள்ளது. துவளுதல் - வாடுதல். நுண்மருங்கு - சிறிய இடை. வெரீஇ - அஞ்சி. வெருவி என்னும் சொல் வெரீஇ என்று அளபெடுத்தது.

(அடி-2) மதவேழம் - மதம் கொண்ட யானை. மாமருப்பு - பெரிய தந்தம். பைங்கழை - பசுமையான மூங்கில்.

(அடி-3) கோழரை - வழுவழுப்பான அடிப்பாகம். "கோழரை குயின்ற பூகம்" (திருவிளை. திருமணப். 65.)

84. தாவியஞ் சிறையளி கொழுந்தேன் வழிந்துமேல்
தவழநறும் போதுகமழும்
தாழ்குழற் காட்டிற் படிந்தூர பசுந்
தாதுகடிமிர்ந்து துடரப்
பூவின்மெல் லியவிணைச் சிற்றடி வருந்தப்

பொருதுமெல் லெனநடந்து
போந்துகுயில் கானம்பொழில் சீதள நிழற்செயும்
புணைநெடுங் கரையிலேறித்
தூவியிள வன்னக் குழாமெனச் சூழ்ந்திடும்
தோழிய ருடன்காவிரித்
துளிதூங்கு தண்ணறுங் குறுதிவலை பொங்கத்
துணைச்சிலம் பொலிப்ப
மேவுபே ரானந்த வெள்ளவடி வானகிளி
வெள்ளநீ ராடியருளே
வெள்ளைமால் விடையேறும் வள்ளல்பா
லுறைசொருணம்
வெள்ளநீ ராடியருளே. (5)

(அடி-1) குழற்காடு - கூந்தலாகிய காட்டில்.

(அடி-2) பூவின் மெல்லிய - பூவைக்காட்டிலும் மென்மை யான. சிற்றடி - சிறிய அடி; பண்புத்தொகை. சீதளம் - குளிர்ச்சி.

(அடி-3) அன்னக் குழாம் — அன்னப் பறவைகளின் கூட்டம்.

(அடி-4) மேவு - பொருந்திய. பேரானந்தம்-ஒப்பற்ற மகிழ்ச்சி. "பற்றிய பேரானந்தம் பாடுதுங்கா ணம்மாணாய்" (திருவாசகம், 8. 20)

85. தலையாடு கந்தடுங் கழைசூழிப் புகர்முகத்
தறுகட் கடாக்களிற் றின்
தந்திநிக ரெனஇளங் கொங்கைதிகழ் மங்கையர்கள்
தனிலுயிர்த் தோழியர்கடம்
கிளையாடு பைங்கழைத் தோள்கொட்டியாடக்
கிளிர்ந்துவரி யளிஏழிசைக்
கீதங்கள் பாடவொளி ரஞ்சனந் தீட்டியிடு
கெண்டையங் கண்களாட
வளையாட வச்சிரக் கொப்பாட மேகலை
மருங்குற குறங்கியாட
வள்ளைவார் காதின்மணி மகரகுண் டலமாட
வருகா விரிப்புளினமேல்
விளையாடி நின்றிடும் பச்சைப் பசுங்கிள்ளை

வெள்ளநீ ராடியருளே
வெள்ளைமால் விடையேறும் வள்ளல்பா
லுறைசொருணம்
வெள்ளநீ ராடியருளே. (6)

(அடி-1) தறுகண்- அஞ்சாமை. கடாக்களிறு - மதம்கொண்ட ஆண்யானை. கிளை - சுற்றம்.

(அடி-2) ஏழிசைக்கீதங்கள் :-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். அஞ்சனம் - மை. கெண்டயங் கண்கள் - கெண்டை மீன் போன்ற கண்கள்.

(அடி-3) வச்சிரக் கொப்பு - வயிரத்தால் செய்யப்பட்ட மகளிர் காதணிவகை. இது மேற்காதில் அணியப் படுவது. மேகலை - ஒட்டியாணம். மாதர் இடையில் அணியும் ஏழு அல்லது எட்டுக்கோவையுள்ள அணிவகை. "மின்னு மேகலையும் தோடும் கொடுத்து" (சீவக. 2662); (சிலப், 4. 30, உரை) புளினம் - மணற்குன்று.

(அடி-4) பச்சை - பசுங்கிள்ளை. "முத்தாடு பச்சைப் பசுங் கிள்ளை" (முத்துக். பி. த. சப் 1.)

(வேறு)

86. கங்குற் பருகி யோங்குசுடர்க்
கடவுள் உதிக்கும் பெரியகருங்
கடலின் வயிறு கிழியவிரு
கரையி னேரேயெழுந் துசெழுஞ்
செங்குங் குமத்தின் வேர்கமழ்ந்து
திகழும் நெடிய மராமரங்கள்
சேர முறித்துக் காடுபடு
செல்வ முழுதுஞ் சூறையிட்டுக்
கொங்கிற் பொலிந்த நறுமலரும்
குலவால் வளையும் கரிமருப்பும்
குளிர்வெண் ணிலவும் சொரிதரளக்
குவையும் புளினந் தொறுமொதுக்கிப்
பொங்கிப் பரந்து சுழித்தோடும்
புதுநீ ராடி யருளுகவே
பொழிபொன் னளந்த இளங்கிளியே
புதுநீ ராடி யருளுகவே.

(அடி-1) கங்குல் – இரவு. சுடர்க்கடவுள் - சூரியன்.

(அடி-2) மராமரங்கள் - ஆச்சாமரங்கள். "மராமரம் ஏழ்துளை யெய்த" (கம்ப. சிறப்புப். 5.) காடுபடு - காட்டில் தோன்றிய. சூறையிட்டு - கொள்ளையிட்டு.

(அடி-3) தரளக்குவை - முத்துக்குவியல்.

87. சூழ்ந்து மரும மகளிர்விரை
தோய்குங் குமமும் மான்மதமும்
தொடுத்த மலரும் நறுஞ்சாந்தும்
சுடர்ப்பூங் கரத்தில் ஏந்தியிட்டு
தாழ்ந்து வணங்கி இருமருங்கும்
சார்ந்து மூழ்கி எழுந்துதொழத்
தகுந்தெய் வங்க டமைத்தொழுது
தளிர்க்கை கூப்பச் சுழித்தோடி
ஆழ்ந்து கொடைக்கின் றடங்கரியின்
ஆதிசீ தளப்பைஞ் சுனைகடொறும்
அருவி பெருகு கான்யாற்றின்
அடர்ந்து மோதிப் பத்தகை
போழ்ந்து விரைந்து வரும்பொன்னிப்
புதுநீ ராடி யருளுகவே
பொழிபொன் னளந்த இளங்கிளியே
புதுநீ ராடி யருளுகவே. (8)

(அடி-1) விரை - நறுமணம். மான்மதம் - கஸ்தூரி. நறுஞ்சாந்து - மணமுள்ள சந்தனம். பூங்கரம் - அழகிய கை.

(அடி-2) தளிர்க்கை - தளிர்போன்ற கை.

(அடி-3) அதிசீதளம் – மிகவும் குளிர்ச்சியான. பைஞ்சுனை - பசுமையான சுனை; மலையூற்று - மானிடரால் உண்டாக்கப் படாதது.
கான்யாறு – காட்டாறு.

88. வழிந்... ...... ......க
வளர்ந்திரு ம...... னனிநறுந்
தாமரை நீரு...... ...வியக்
குளிர்வெண் முத்துறை சங்குளந்த
......மபு நிறைந்திடு சிவிறி

யெடுத்தெதிர் நின்... செய்து

......... ......... .........

......... ......... .........

பொழிந்து விரைந்து பரந்து சுழித்திடு

புதுநீ ராடுகவே

பொருவில் வளம்பெறு சொர்ண விளங்கிளி

புதுநீ ராடுகவே. (9)

(அடி-1) ஏடுகள் பாதிமட்டும் உள்ளமையால் செய்யுளின் சீர்கள் விடுபட்டுள்ளன.

(அடி-2) சிவிறி - நெடுந்துருத்தி என்னும் நீர்வீசு கருவி.
"நெய்ம்மாண் சிவிறியர்" (பரிபாடல், 6 - 34)
"சிவிறிவீ சக்குறுந் துளியெம் மருங்குமோடி"
(மீ.பி.த, நீராடல். 4)

89. குனிசிலை வெ...... ...டை

பொன்சிற ...... கனநடை

அங்கலுழ குல மயிலிய

......கலணவ ...சேருடக்

........... ........... ...........

........... ........... ...........

கவின்வளர் மான்மத விழுதள வித்திகழ்

கந்தம்கமழ் நீர்குளனில்

இனிதினிறைத் தரிசனம் மணம்வீச வெழுந்து

................ குடைந்திலகிய

கரிய நறுங்குழ லசையன மென

வலமிசை தாவப்

புனித மிகுஞ்சுர நதிநிகர் பொன்னிப

புதுநீ ராடுகவே

பொருவில் வளம்பெறு சொருண விளங்கிளி

புதுநீ ராடுகவே. (10)

(அடி-1) குனிசிலை — வளைந்தவில். (அடி-2) கந்தம் - வாசனை.
(அடி-3) அரிசனம் — மஞ்சள். (அடி-4) பொன்னி— காவிரி. இப்பாடல் உள்ள ஓலை ஒடிந்து பாதிமட்டும் உள்ளமையால் அடிகள், சீர்கள் விடுபட்டுள்ளன.

## 10. ஊசற் பருவம்

90. ஓங்கிநிமிர் வான்முக டளந்தண்ட கோளமேல்
உயர்சித்ர மணிமண்டபத்
தொளிர்நிலாத் தவழ்தருஞ் சந்திர காந்ததக
டொதுக்கிழைத் தொப்பமிட்டு
பாங்குபெறு தலமிசைப் பாசொளிய மரகதப்
பருமணிக் கால்நிறுத்திப்
பவளநெடு விட்டத்தில் இட்டபொற் காசினிற்
பகர்நித் திலம்தொடுத்துத்
தாங்குமொழு கொளிவடம் பூட்டி மாணிக்கத்
தழும்புசுடர் விடுபலகைமேற்
தற்பரா பரைமுதற் சத்திவடி வாயுலகு
தரவினி திருந்த தொப்பப்
பூங்கமல வாவிநிறை நாங்கைநகர் வாழ்செல்வி
பொன்னூசல் ஆடியருளே
பொன்னளந் திடுகருணை யின்இளம் பிடிமன்னு
பொன்னூசல் ஆடியருளே. (1)

(அடி-1) வான்முகடு - ஆகாயத்தின் உச்சி.
அண்டகோளம் - அண்ட உருண்டை.

(அடி-2) நித்திலம் - முத்து.

(அடி-3) பராபரை - சிவசக்தி. பரமாயும், அபரமாயும் இருப்பவள் தேவி.

(அடி-4) வாவி - குளம்.

91. முத்தமிடு பச்சைப் பசுங்கிளி அசைந்தாட
முகிழ்முத்து மாலையாட
முகிழ்நாண் மலர்நிகர்த் திடுகர நிமிர்ந்தாட
முறுவல்வெண் ணிலவுமாடக்
கொத்திலகு கற்பகத் தெரியல்சூழ் கரியமென்
கூந்தலம் பின்னலாட
குலவுகுளி ரமுதமதி முகமண் டலந்தனிற்
குறுவெயர்வை யாடநீடு
சத்திவடி வாயகில புவன கோடிகளும்
தனித்தனி படைத்தளித்து

சதுமுகப் பிரமன்முத லனைவருக் கும்பெருந்
தாயாகி வந்துபரிவாற்
புத்தியும் சித்தியும் முத்தியுந் தருசெல்வி
பொன்னூரச லாடியருளே
பொன்னளந் திடுகருணை யின்இளம் பிடிமன்னு
பொன்னூரச லாடியருளே. (2)

(அடி-1) நிகர்த்தல் - ஒத்திருத்தல். கரம் - கை. முறுவல் - புன்சிரிப்பு.

(அடி-2) கற்பகத் தெரியல் - கற்பகமாலை.

(அடி-3) அகிலம் — பிளவுபடாத. அனைவருக்கும் - எல்லார்க்கும்.

92. அரிபரந் தஞ்சனந் தீட்டுமபில் விழியாட
அணிமகரக் குழையுமாட
அம்பொற் பதக்கமோ கனமாலை ஆடவளை
யாடஅட் டிகையாடநற்
பரிபுரம் அசைந்தாட நவமணி இழைத்திடும்
பாடகந் தண்டையாடப்
பாதகிண் கிணியாட நெற்றியிற் கட்டுபொற்
பட்டமொடு சுட்டியாட
வரியளி துதைந்தாட விளரிவண் டோலமிட
வரிசுரும் பிசைதொடுப்ப
வான்மிசை பறந்துபண் பாடிஞிமி றலம்வர
மலர்சொரி விரைகமழ்ந்து
பொருக்கவி ழும் நாண்மலர் தொடுத்தி லகியிடு
பொன்னூரச லாடியருளே
பொன்னளந் திடுகருணை யின்இளம் பிடிமன்னு
பொன்னூரச லாடியருளே. (3)

(அடி-1) அரி - செவ்வரி. அட்டிகை - கழுத்தணிவகை.

(அடி-2) பரிபுரம் - சதங்கை; பாடகம் - மகளிர் காலணி.

(அடி-3) வான்மிசை-ஆகாயத்தில். ஞிமிறு - வண்டு. விரை - நறுமணம்.

93. குருமணி பதித்துநிறை சூழியக் கொண்டையுங்
குளிருச்சி வாளிமுத்துங்
கொப்பிட்ட காதுமயி லொப்பிட்ட விழியுமிரு
கோட்டிளந் திங்கணுதலும்

வருபெருங் கருணைபொழி திருமுகமும் வெண்ணகையும்
மங்கள நிறைந்தவடிவு
மற்றுமகி லாண்டமும் பெற்ற சிறுவயிறும்
வணங்குகொடி யிடையுமகிழ்கூர்
நரபதியு மிக்கசுர பதியுநான் முகன்மாலும்
நகைமுடி வணங்குபதமும்
நாடொறுந திகழணி நலம்பெற விளங்கவளர்
நாதநா தாந்தமென்னும்
பொருவரிய பெருவெளியி லிலகு பேரொளியநீ
பொன்னூச லாடியருளே
பொன்னளாந் திடுகருணை யின்இளம் பிடிமன்னு
பொன்னூச லாடியருளே. (4)

(அடி-1) குரு - ஒளி சூழியக்கொண்டை - உச்சிக்கொண்டை. வாளி - மேற்காதிலுள்ள ஓரணி. அயில் - வேல்.

(அடி-2) வெண்ணகை - புன்சிரிப்பு. மங்கள நிறைந்த வடிவு - அழகு நிறைந்த உருவம். கொடியிடை - கொடி போன்ற இடை. கூர் - உரிச்சொல். மிகுதிப் பொருளில் வந்துள்ளது.

(அடி-3) சுரபதி - இந்திரன்.

(அடி-4) பெருவெளி - ஆகாச வெளி. நாதம் - பத்மராகம் என்னும் சிவப்புநிற ரத்னத்தின் ஒளியுடன் பீஜ கோசங்களுக்கு இடையே உள்ள தையல் போல் வடிவம் கொண்டது. நாதாந்தம் - மின்னலைப் போல் ஒளியுடன் இடப்பக்கத்தில் பிந்துவோடு ஏர்க்காலைப் போன்ற வடிவம் உள்ளது.

94. திருந்துசெங் தேன்றுளித் திலகுகற் பகநறுந்
தெரியல்சூழ் கரியகூந்தற்
சிற்றிடைப் பேரல்குல் அயிராணி யுந்துய்ய
செவ்வரி பரந்துநீண்ட
கருந்தடங் கட்பெருந் திருமகளும் வளர்செழும்
கலைமகளும் எழுதுகோல்போல்
கவினெழுகு மிரதியும் நாற்பாலும் நின்றுசெங்
காந்தளங் கைகள்நீட்டி
பரிந்துதிகழ் ஒளிமணி வடம்பிடித் தாட்டவுயர்

பரநாத மூலத்தலப்
பருமுளையி லோங்கியெழு முழுமுதலை யரமகளிர்
பல்லாண்டு கூறமகிழப்
பொருந்துநவ மணிகதிர் விரித்தெழில் கொழித்திடும்
பென்னூரச லாடியருளே
பொன்னளந் திடுகருணை யின்இளம் பிடிமன்னு
பொன்னூரச லாடியருளே. (5)

(அடி-1) தெரியல் - மாலை. சிறுமை+இடை=சிற்றிடை.

(அடி-2) கவின் - அழகு. நாற்பாலும் - நான்கு திக்கிலும். செங்காந்தள் - சிவந்த காந்தள்மலர்..

(அடி-3) மணிவடம் - மணிமாலை. அரமகளிர் - தேவ லோகத்துப் பெண்கள்.

95\. கோத்தகதிர் மேகலை தயங்குமின் னிடைக்கருங்
குவளைவிழி பவளஇதழ்செங்
குமுதவா யமுதமொழி பச்சிளங் கழைவென்று
குலவுதோ ளிணைசிறந்து
வாய்த்தகன் னியரெழு வருங்குழுமி நிற்பவொளி
மணிமிட றசைந்துபாடி
வந்துகந் திருவர்குல மகளிரே ழிசையென்று
மழைமாரி பொழியநின்று
பார்த்தும் விளிசெய்தும் தழீஇக்கொண் டுதைத்தும்நின்
பாங்கியர்குழாங் குழுமலிற்
பணைதொறுந் தளிர்த்திடை யிடையரும்பிற்
பருத்துநறு மணமலிந்து
பூத்தகொழு மலர்செழுந் தாதுகள் நிறைப்பவளர்
பொன்னூரச லாடியருளே
பொன்னளந் திடுகருணை யின்னிளம் பிடிமன்னு
பொன்னூரச லாடியருளே. (6)

(அடி-1) கதிர்மேகலை - ஒளியையுடைய ஒட்டியாணம். தயங்கும் - விளங்கும். பவளஇதழ் - பவழம் போலச் சிவந்த உதடு. கழை – மூங்கில்.

(அடி-2) கன்னியர் எழுவர் - சப்தமாதர்கள்.

(அடி-3) தழீஇ - தழுவி. மகளிர் உதைத்தலால் மரங்கள் மலரும் என்பர். "ஏடவிழ் மகிழ்சுவைக்க வெழிற் பாலை நண்பு கூடப் பாடல நிந்திக் கத்தேம் படி

முல்லை நகைக்கப்புன்னை ஆடநீள் குராவ ணைக்க வசோகுதைத் திடவாசந்தி பாடமாப் பார்க்கவார்சண் பகநிழல் படத்த ளிர்க்கும்" (சூடா. 12, 109.)

பாங்கியர் குழாம் - தோழியர் கூட்டம்.

(அடி-4) கொழுமை - செழுமை. தாது - மகரந்தப் பொடி.

96. செழியர்குல மகளாகி முடிசூடி யழல்விழிச்
சிங்கம் சுமந்தபீடத்
தினிலிருந் தரசுரிமை செய்துநெறி கோடாது
செங்கோல் செலுத்திவந்து
சுழிகொள் வாம்புரவிக் கொடிஞ்சியந் தேரூர்ந்து
சூழமெண் திசைசெய்து
சுந்தரக் கடவுண்மங் கலமணந் தனிலினிய
சுவைநிறை விருந்தளித்து
விழிதொறுங் குழுமிநெடு வளரவளந் தருநிதிய
மறிதிரைக் கையிலேந்தி
மாறுது புனல்பெருகி மண்டிவரு காவேரி
வள்ளலென வாரிவாரி
பொழியும்வட கரைபெருங் கோயில்கொண் டருள்செல்வி
பொன்னூச லாடியருளே
பொன்னளந் திடுகருணை யின்னிளம் பிடிமன்னு
பொன்னூச லாடியருளே. (7)

(அடி-1) செழியர் - பாண்டியர். செங்கோல் நெறிகோடாது - செங்கோன்மை வளையாமல். வாம்புரவி - தாவிச் செல்லும் குதிரைகள்.

(அடி-2) கொடிஞ்சி - தேரின் ஒருறுப்பு.

"தாமரைப்பூ வடிவாகப் பண்ணித் தேர்த்தட்டின் முன்னே நடுவது" (மதுரைக்காஞ்சி. 752, நச்சினார்க்கினியர்.)

"நெடுந்தேர்க் கொடிஞ்சி" (புறநா. 77.) இது தாமரை மொட்டு வடிவமுள்ளது என்றும் கூறுவர். சுவை நிறை விருந்து - அறுவகையான சுவைகள் நிறைந்த புதிய உணவு.

(அடி-3) மறிதிரைக்கையில் - கீழ்மேலாகப் புரளும் அலை யாகிய கையில். புனல் - நீர். வள்ளல் - கொடுக்கும் கொடையாளி.

97. மேகபட லங்கிழித் தமுத கிரணமெழு
வெண்மதியி னுடலுரிஞ்சி
விரைகமழு நறுமலர்த் தாமநாற் றித்தென்றல்
வீசுசா ளரம்விளங்க
மாகமீ மிசையோங்கு மகமேரு வெனநின்ற
மாடமாளி கைகடோறு
வளர்தோகை மாமயில்க ளெனவந்த லார்கள்நட
மாடுமணி மறுகுமொருபால்
ஆகம புராணசாத் திரவிசா ரணைசெய்யும்
அன்பருறை மடமுமொருபால்
அன்னசா லையுமொருபால் வேத பாராயண
அருந்தவரிடங் களுமொருபால்
போகபூ மியினிலகு திருநாங்கை வாழ்செல்வி
பொன்னூச லாடியருளே
பொன்னளந் திடுகருணை யின்னிளம் பிடிமன்னு
பொன்னூச லாடியருளே. (8)

(அடி-1) மேகபடலம் - மேகக் கூட்டம். விரை - நறுமணம். சாளரம் - சன்னல்

(அடி-2) மீமிசை : ஒரு பொருட் பன்மொழி. மகமேருஎன பெரிய மேருமலை போல.

(அடி-3) ஆகமம் புராணம் இவைகளை ஆராயும் கல்விமான்கள் வசிக்கின்ற இடம் ஒரு பக்கம்.

அன்னசாலை ஒரு பக்கம். வேதபாராயணம் செய்யும் அறிஞர்கள் ஒருபக்கம்.

(அடி-4) போகபூமியின் இலகு - இன்பமே அனுபவிக்கும் இந்திரலோகத்தைப் போல விளங்குகின்ற.

98. மகிழ்கோங்கு செண்பக மணங்கமழ் செருந்திமது
மலரிலகும் வஞ்சிகாஞ்சி
மந்தார மஞ்சரி தயங்குகூ விளமுதல்
வயங்குபூஞ் சோலைமல்கித்
திகழ்பாங்கர் நந்தவனங் கள்பறபல வண்டு
செவ்வழி தொடுத்துவந்து
தேனசைக் கின்னிசைப் பாடல்செய் தோடித்
திரிந்திட விளங்குமிளகி
நிகழுங் கரும்பென்ன நெற்பயிர் தழைந்துவிளை
நிலம்வளந் தருவாழையின்

நீள்கனி பலாச்சுளை கனிந்தொழுகு தேறல்நெடு
வீதியிற் பாயுநீங்காப்
புகழ்தாங்கு திருநாங்கை நகரோங்கி வாழ்வளர்
பொன்னூச லாடியருளே.
பொன்னளந் திடுகருணை யின்னிளம் பிடிமன்னு
பொன்னூச லாடியருளே (9)

(அடி-1) கோங்கு – கோங்கமரம். இலவமரத்தைப் போன்றே மலருங் காலத்தில் இலையின்றித்தோன்றும். கூவிளம்-வில்வம்.

(அடி-2) செவ்வழி - பெரும்பண்களுள் ஒன்றாகிய முல்லைப்பண். இளகி-தழைத்து. (இளகு காடு : சீவக சிந்தாமணி, 1778.)

(அடி-3) தேறல் - தேன்.

(அடி-4) புகழ் தாங்கு - புகழையுடைய.

99. தாவுதெண் டிரையெறி கருங்கட லுடுத்திடுந்
தரணிதனில் நவநிதியமும்
சகலபாக் கியமும்வள ரளகேசன் நல்லுரிமை
தழைதோழ னாகிநிற்கத்
தேவர்பணி தேவர்சில பேர்க்கொ ளித்தேயருள்
சிறந்ததிரு விளையாடல்செய்
செல்வரைந் தொழிலு நிதமல்கி நிறைந்த
திருந்தருந் துணையதாகி
மேவுபர மானந்த வொளியாகி வெளியாகி
மிக்கபே ரின்பநிறைவாம்
வெள்ளவடி வாகிமற் றுள்ளபடி கண்டவர்
விரும்பிதய கமலமாகிப்
பூவுலகு முழுவதும் பெற்றசிறு பெண்பிள்ளை
பொன்னூச லாடியருளே
பொன்னளந் திடுகருணை யின்னிளம் பிடிமன்னு
பொன்னூச லாடியருளே. (10)

(அடி-1) தெண்டிரை - தெளிந்த அலைகள். கருங்கடல் உடுத்திடும் தரணிதனில் - கரியநிறம் பொருந்திய கடலை ஆடையாக உடுத்திக் கொண்டிருக்கும் பூமியில். நவநிதியம் - பதுமம், மாபதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், நந்தம், நீலம், கர்வம் ஆகிய ஒன்பது வகைப்பட்ட குபேரநிதி. அளகேசன் - குபேரன்.

(அடி-3) இதய கமலம் - இதயமாகிய தாமரைப்பூ.

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

(எண் – செய்யுள் எண்.)

# அரும்பதமுதலியவற்றின் அகராதி. (எண் செய்யுள் எண்)